Go ahead
Try-Me!



# வேற வீடு மாத்திப் போனப்போ...

## அந்த பில்டிங்குல

எல்லா குழந்தைங்களும்
ஆயிரத்தெட்டு கும்மாளம்
அடிச்சிட்டிருந்தாங்க... என்னை
யாரும் கண்டுக்கல! எப்படி
இவங்கள ஃப்ரெண்ட்ஸ்
ஆக்கிக்கறது...ம்? ஆங், ஐடியா!
ஒரு ட்ரை-மீ சாப்பிட்டேன்...
டக்டக்குனு நேரா போயி அவங்
களுக்கும் கொடுத்தேன் கைநிறைய
ட்ரை-மீ....
"ம், வாங்க, ட்ரை மீ!"
அவ்ளோதான்! ஒரே நாள்ள
அஞ்சு பேரு என்
ஃப்ரெண்ட்ஸ்
ஆயிட்டாங்க.







**Try-Me!**

சவால் விடும் புதுச்சுவை

HTA-8507



# அம்புலிமாமா

ஜுன் 1993



## பொருளட்க்கம்






தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.

# மங்கை

ஜூன் 1993

☆ அண்ணன் பெருமாள் கோயில்
(அருள்வலம்)

☆ நூற்றாண்டு கண்ட பெரியவர்
(சில பக்தர்கள் அநுபவங்கள்)

☆ கோடைக்கால குளிர் பானங்கள்

☆ சமையற் கலை

☆ 4 இனிய சிறுகதைகள்

☆ 3 சிறந்த கட்டுரைகள்...

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை
ரூ. 6/.

SELVAM




# அம்புலிமாமா

மாதாமாதம் கதைகள் வாயிலாக இந்திய நாட்டின் கடந்த கால,
தற்கால மேன்மையை விவரிக்கிறது.

வண்ணப்படங்கள் அறுபத்து நான்கு பக்கங்களிலும் மிளிர, புராணங்கள்,
பழங்கதைகள், வரலாற்று நிகழ்ச்சிகள், பெரியோர்களின் வாழ்க்கை
ஆகியவற்றின் அடிப்படையில் அற்புதக் கதைகளையும் மேலும் சீரிய
கற்பனைக் கதைகளையும் இன்றைய நிலைக்கு ஏற்ப அளிக்கிறது.

11 மொழிகளிலும் சமஸ்கிருதத்திலும் கூட வெளிவருகிறது.

சந்தா விவரங்களை அறிய முகவரி:

டால்டன் ஏஜன்சீஸ், 188 என்.எஸ்.கே. சாலை, சென்னை-600 026




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## பெற்றோர்கள் நண்பர்கள்

கோடை விடுமுறை குழந்தைகளுக்கும் சிறுவர் சிறுமிகளுக்கும் ஆரம்பமாகி விட்டது. இதற்கு முன் இவர்கள் தம் தேர்வுகளுக்காக அதிக நேரத்தைப் படிப்பில் செலவழித்தார்கள். அப்போது விளையாடுவது குறைந்தும் போயிற்றுதான். பெற்றோர்களும் இவ்விஷயத்தில் அப்போது கண்டிப்புடன் நடந்து கொண்டதும் சரிதான்.

தேர்வுகள் முடிந்து விட்டதால் இவர்கள் தம் நண்பர்களுடனும் உறவினர்களுடனும் உல்லாசமாகப் பொழுதைப் போக்குவது இயல்பே. இதற்காக இவர்கள் வேறு ஊர்களுக்கும் செல்வது உண்டு. சிலர் புத்தகங்களைப் படிப்பதையும் வேறு சிலர் விளையாட்டுக்களில் கவனம் செலுத்துவதையும் காண்கிறோம்.



இந்த நிலையில் தற்காலத்தில் இவர்கள் வாழும் வீடுகள் சிறியவை. விளையாடப் போதிய பரந்தவெளிகளும் கிடையாது. எனவே இச்சிறுவர்களின் விளையாட்டுக்களில் சிறிது நேரம் அவர்களது பெற்றோர்களும் கலந்து கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்! இதனால் பல அறிவுரைகளைப் பெறவும் அவர்களைப் பெற்றோர்கள் நன்கு புரிந்து கொள்ளவும் வாய்ப்பு ஏற்படுகிறது. சிறுவர்களும் பயத்தை விட்டு எல்லோருடனும் சகஜமாக பழகப் பயிற்சி பெற்று விடுகிறார்கள். எல்லாப் பெற்றோர்களும் தம் குழந்தைகளுக்கு இவ்வாறு உற்ற நண்பர்களாகத் திகழ வேண்டும்.

மதிமுகம்: 92 ஜுன் 1993 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# ஆறாவது முறையாக அதிபர்




ஒரு அரசியல்வாதி தொடர்ந்தாற் போல ஆறாவது முறையாக ஒரு நாட்டின் அதிபராக ஆவது சாதரண விஷயம் அல்லவே. இந்தோனேஷிய அதிபர் ஜெனரல் சுகர்தோவிற்கு இந்த கௌரவம் கிடைத்துள்ளது. அந்நாட்டின் தலைநகரான ஜாகர்த்தாவில் சென்ற மார்ச் மாதம் பத்து நாட்களாக நடந்த 1000 உறுப்பினர்கள் கொண்ட 'பிபிள்ஸ் கன்சல்டேடிவ் அசெம்பிளி'யின் கூட்டத்தில் 72 வயதான ஜெனரல் சுகர்தோ இந்தோனேஷியாவின் அதிபராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பதினாறாம் நூற்றாண்டில் 13,000 தீவுகளடங்கிய இந்தோனேஷியாவில் போர்த்துக்கீசியர் குடிபுகுந்தனர். அங்கு ஏராளமாகக் கிடைக்கும் வாசனைப் பொருள்களை அவர்கள் வியாபாரம் செய்தார்கள். ஆனால் அவர்களை ஆங்கிலேய வியாபாரிகள் துரத்திவிட்டுத் தாம் அந்த வியாபாரத்தை மேற்கொண்டார்கள். 1595-ல் டச்சுக்காரரர்கள் ஆங்கிலேயர்களை விரட்டி இத்தீவுகளை டச் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியின் கீழ் கொண்டு வந்தார்கள். 1768-ல் இது நெதர்லாண்டு அரசாங்க ஆட்சியின் கீழ் வந்தது. 1939-45 நடந்த இரண்டாவது உலகப் போரில் ஜப்பான் இப்பகுதியைக் கைப்பற்றித் தன் தேசிய அரசாங்கத்தை நிறுவியது.

நேச நாடுகளிடம் 1945-ல் ஜப்பான் தோற்கவே சுகர்னோ தலைமையில் தேசியவாதிகள் இதனை மீட்க இது டச்சுக்காரரர்களிடமிருந்து சட்டபூர்வமாக விடுதலை பெற்றது. 1963-ல் சுகர்னோவிற்கு எதிராகக் கம்யூனிஸ்ட்கள் புரட்சி செய்தபோது அதனை ஜெனரல் சுகர்தோ அடக்கி நாட்டில் அவசர நிலையை அறிவித்தார். 1967-ல் அவர் சுகர்னோ வகித்த பதவியை ஏற்றார். அதன்பின் 1968, 1973, 1978, 1983, 1988 ஆண்டுகளில் நாட்டில் அதிபர் பதவிக்கு இவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். தற்போது ஆறாவது முறையாக அதிபராகி இருக்கிறார்.

வாய் வார்த்தைகளைவிட செயல்களை நம்புபவர் சுகர்தோ. இருபத்தைந்து ஆண்டுகளாக அவர் செய்த சீர்திருத்தங்கள் இந்தோனேஷியாவின் பொருளாதார நிலையை உயர்த்தின. இவரது ஐந்தாண்டுத் திட்டங்கள் பிறநாடுகளையும்

கவர்ந்தன. இவற்றால் ஆண்டிற்கு 6 சதம் முன்னேற்றம் ஏற்பட்டது. இந்தோனேஷியா இன்று முன்னேறும் பத்து நாடுகளில் ஒன்றாகத் திகழ்கிறது.




ஒரு காலத்தில் இந்தோனேஷியா தன் தேவைக்கான அரிசியைப் பிறநாடுகளிலிருந்து இறக்குமதி செய்தது. ஆனால் 1984-இல் தன்னிறைவு பெற்று அரிசி இறக்குமதியை நிறுத்திவிட்டது. இருபது ஆண்டுகளில் குழந்தைகள் இறப்பது 1000க்கு 140 லிருந்து 60 ஆகக் குறைந்தது. 1971-ல் எழுத்தறிவற்றவர்கள் 39 சதமாக இருந்தனர். தற்போது 16 சதமே இருக்கிறார்கள். மக்கள் தொகைப் பெருக்கம் 2.3 சதத்திலிருந்து 1.6 சதமாகக் குறைக்கப்பட்டது. இந்த நடவடிக்கைகளால் அதிபர் சுகர்தோ மக்கள் மனதில் உயரிய இடம் பெற்றுவிட்டார்.

தற்போது மக்கள் சுகர்தோவிற்குப்பின் அவரது வாரிசாக யார் வருவார் என்பது பற்றி விவாதித்து வருகிறார்கள்.

### இந்தோனேஷியா பற்றி மேலும் சில விவரங்கள்

13500 தீவுகள் கொண்ட இந்தோனேஷியா 5510 கி.மீ. தூரம் பரவியுள்ளது. இத்தீவுகளில் சில இந்து மகா சமுத்திரலும் மற்றவை பசிபிக் கடலிலும் உள்ளன.

இந்தோனேஷியா உலகில் 16வது பெரிய நாடு (1,919,450 ச.கி.மீ.) மக்கள் தொகையில் 5வது இடத்தில் உள்ளது. (26,90,000000).

படைப்பலத்தில் உலகில் 11வது இடம் பெறுகிறது. முன்னேற்ற மடையும் நாடுகளில் 5வது இடம் வகிக்கிறது.

பயிர்த் தொழிலில் உலகில் மூன்றாவது இடம் பெறுகிறது இங்கு ஆட்சி மொழி ரோமன் எழுத்துக்களில் எழுதப்படும் பாஷா இந்தோனேஷியா. இதைத் தவிர 200 மொழிகள் இந்நாட்டில் உள்ளன.

நாட்டுப் புழக்கத்திலுள்ள நாணயம் ருபியா.



# சனி போய்விட்டான்!

சிவபுரி ஜமீன்தாரரிடம் சிவசாமி என்ற இளைஞன் வேலை செய்து வந்தான். அவனை ஜமீன்தாரர் ஒரு வேலையாக வெளியூருக்கு அனுப்பினார். அவன் காட்டு வழியாகப் போய் .கொண்டிருக்கையில் திடீரென பெருத்த மழை பெய்யவே அவன் சுற்றிலும் பார்த்தான். சற்று தூரத்தில் சில வீடுகள் தென்படவே ஓடிப்போய் ஒரு பழைய வீட்டை அடைந்து அதன் வாசல் கதவைத் தட்டினான்.

அப்போது நன்கு இருட்டிவிட்டது. கதவைத் திறந்தவாறே கையில் ஒரு விளக்குடன் ஒரு கிழவர் சிவசாமியின் முன் நின்றார். அவர் அவனைப் பார்த்து "பர்வம்! மழையில் அதிகம் நனைந்துவிடவில்லையே. உள்ளே வா" என்று கூறி அவனை அழைத்துப் போய் ஒரு கட்டிலில் உட்கார வைத்தார்.

கிழவர் அவனைப் பற்றி விசாரிக்கவே அவனும் "எங்களூர் ஜமீன்தாரரிடம் ஒரு சாதாரண சேவகன் வேலை செய்கிறேன். அவர் இன்ன வேலைதான் சொல்வார் என்பது கிடையாது. இப்போது பாருங்கள். அவரது மாமாவின் ஊருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். அவரது வீட்டுப் பூனை அழகான குட்டிகளைப் போட்டிருக்கிறதாம். அவற்றில் ஒன்றை வாங்கிக் கொண்டு ஜமீன்தாரரிடம் கொடுக்க வேண்டும்" என்று சலித்துக் கொண்டே சொன்னான்.

கிழவரும் "உன் போன்ற இளைஞன் இந்த மாதிரி பைத்தியக்கார வேலைகளை எல்லாம் செய்யக் கூடாது. உனக்கு ஏற்ற வேலை ஒன்றைக் கூறுகிறேன். செய்கிறாயா?" என்றார். சிவசாமியும் அதென்ன வேலை என ஆவலுடன்

—சிவனார் செல்வன்—



கேட்டான்.

கிழவரும் "இந்நாட்டு அரசர் கடலில் உல்லாசப் பயணம் சென்ற போது படகு கவிழ்ந்து மூழ்கிப் போனார் என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. அவருடைய ஒரே மகள் நந்தினி. அவள் தன்னை மணக்க விரும்பி வருபவனிடம் மூன்று கேள்விகளைக் கேட்கிறாள். அவற்றிற்கு அவன் சரியான பதிலைக் கூறாவிட்டால் முதலைக்கு உணவாக இரக்கமின்றிப் போட்டுவிடுவாள். இதுவரை அவளை மணக்க வந்தவர்கள் எல்லாம் முதலைக்கு இரையாகி விட்டார்கள்" என்றார்.

சிவசாமியும் "இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான். அவரும் "நான் மன்னனின் மெய்க்காவலாளியாகப் பணிபுரிந்தவன். ஒருமுறை தேரில் மன்னர் சென்றபோது விபத்து நேரிடவே அவரைக் காப்பாற்றப் போய் நான் என் ஒரு காலை இழந்தேன். அதனால் என் சொந்த ஊரான இங்கு வந்துவிட்டேன். ஆனாலும் அரண்ம்னையில் நடக்கும் விஷயங்கள் எல்லாம் எனக்கு உடனுக்கு உடன் என் நண்பர்கள் தெரியப்படுத்தி வருகிறார்கள். அதனால் இந்த அற்பப் பூனை விவகாரத்தை ஒதுக்கிவிட்டு நீ தலைநகருக்குப் போய் அரசகுமாரியின் இரக்கமற்ற செயலுக்கு முடிவு கட்டு" என்றார்.

சிவசாமியும் சற்று யோசித்துவிட்டுப் பிறகு "ஐயா தாங்கள் கூறியபடியே செய்கிறேன். என்னை வாழ்த்தி அனுப்புங்கள்" என்று வேண்டினான். கிழவரும் "சபாஷ்! உன் துணிச்சலையும் தைரியத்தையும் கண்டு மகிழ்கிறேன். நீ வெற்றியுடன் திரும்பி வருவாயாக!" என்று வாழ்த்தினார்.

மறுநாள் காலை அவன் அங்கிருந்து கிளம்பிச் சென்று இருட்டும் போது தலை நகரை அடைந்தான். அவன் நேராக அரண்மனைக்குப் போய் "நான் அரசகுமாரியின் கேள்விகளுக்கு பதில் சொல்ல வந்திருக்கிறேன்" என அங்குள்ள



காவலாளியிடம் கூறினான். அவனும் "நீ சரியான பதில் கூறாவிட்டால் என்ன தண்டனை கிடைக்கும் தெரியுமா?" என்று கேட்டான்.

சிவசாமியும் "தெரியும் என்னை முதலைக்கு ஆகாரமாகப் போடுவார்கள்" என்றான் சற்றும் பயப்படாமல். அப்போது இரு பணிப் பெண்கள் வந்து அவனது கண்களைக் கட்டி அழைத்துக்கொண்டு போனார்கள். அவர்கள் அவனை ஒரு அறையில் கொண்டு போய் நிறுத்தி "உன் கண்கட்டை அவிழ்" என்றார்கள். அவனும் கண்கட்டை அவிழ்த்துத் தன் எதிரே சிம்மாசனத்தில் அரசகுமாரி அமர்ந்திருப்பதைக் கண்டான்.

நந்தினி பேரழகிதான். ஆனால் ஏனோ அவள் முகம் வாட்டமுற்றிருப்பது போல அவனுக்குத் தெரிந்தது. அவள் இயந்திரம் போல் "ஆகாயத்தைவிடப் பரந்து கிடப்பது எது? கடலைவிட ஆழமானது எது? வெண்ணெயைவிட மிருதுவானது எது? இம்மூன்று கேள்விகளின் விடையாக ஒரே பதிலைக் கூற வேண்டும்" என்றாள்.

அதற்கு சிவசாமி "ஒரு பெண்ணின் மனம் என்பதே விடை. ஆனால் இப்படிப்பட்ட சாதாரண கேள்விகளையா அறிவைப் பரிசோதிக்க கேட்பது? இதன் பதிலைத் தெருவில் திரியும் சிறுவன் கூடச் சிறிதும் தயங்காமல் கூறிவிடுவானே. இதைவிடக் கடினமான கேள்விகளைக் கேட்க உங்களுக்கு தெரியாதா?" என்று எதிர்க் கேள்வி கேட்டான்.

நந்தினியும் சலிப்புடன் "என்னைச் சுதந்திரமாகச் செயல்பட விட்டிருந்தால் இந்தக் கேள்விகளை உன்னிடம் கேட்டிருக்க மாட்டேன். ஒரு கொடியவன் கையில் நான் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறேன். அவன்தான் இந்தக் கேள்விகளைக் கேட்கச் சொல்லி அதற்கு யார் எந்த பதிலைச் சொன்னாலும் அது சரி இல்லை என்று கூறி அவனை முதலைக்கு இரையாக்கும்படி வற்புறுத்துகிறான். எனவே நீயும் முதலைக்கு இரையா



கத்தான் போகிறாய்'' என்றாள்.

அப்போது சிவசாமி ஆவேசத் துடன் ''உங்களை இப்படிக் கட்டா யப்படுத்தும் அந்தக் கொடியவன் யார் என்று சொல்லுங்கள். அவன் கழுத்தை நெரித்துக் கொன்று விடு கிறேன்'' என்றான். அரசகுமாரி யும் ''உன்னைப் பார்த்தால் நல்ல அறிவாளியாகவும் தைரியசாலி யாகவும் தெரிகிறது. அவனை இன் னும் ஒரு நாளுக்குள் ஒழித்தால் தான் சிக்கல் தீரும். இல்லாவிட் டால் மேலும் நிலை மோசமாகி விடும்'' என்றாள்.

அவள் தன் நிலையை அவனி டம் விவரமாகக் கூறலானாள். ''நானும் என் தந்தையும் உல்லாசப் பயணமாக ஒரு படகில் கடலில் சென்றோம். அப்போது சேனாதி பதி தீரசேனனும் எங்களோடு இருந்தான். படகு கடலில் கொஞ்ச தூரம் போனபோதுதான் அவனது கெட்ட எண்ணம் எங்களுக்குத் தெரிந்தது. படகை ஓட்டியவர்கள் யாவரும் அவனது கைக் கூலிகளே. அவர்கள் படகை ஒரு சிறு தீவிற்குச் செலுத்தினார்கள். தீரசேனன் என் தந்தையை ஒரு செந்நிறக் குகைக் குள் சிறைப்படுத்திவிட்டு என்னை மட்டும் அழைத்துக் கொண்டு அரண்மனைக்கு வந்தான். எல்லோ ரிடமும் படகு கவிழ்ந்து என் தந்தை கடலில் மூழ்கி இறந்து விட்டதாயும் என்னை மட்டும் காப்பாற்றிக் கொண்டு வந்தததா யும் ஒரு கட்டுக்கதையைக் கூறி னான். அவனது கேள்விகள் தான் இவை. இவற்றிற்கு பதில் கூற வந்தவர்களை எல்லாம் பிடித்து முதலைக்கு இரையாக்கிவிட்டான். முடிவில் தானே நான் கேட்ட கேள்விகளுக்குச் சரியான பதில் கூறியதாக அறிவித்து என்னை மணக்கத் திட்டம் போட்டிருக் கிறான். நேற்றிரவு நான் தூக்கம் வராமல் பூங்காவிற்கு உலாவச் சென்றேன். அப்போது ஓரிடத்தில் தீரசேனனும் அவனது கையாளான நாகசேனனும் பேசிக் கொண்டிருப் பதைக் கண்டு நான் மறைந்திருந்து அவர்கள் என்ன பேசுகிறார்கள்

என்று கேட்கலானேன். தீரசேனன் நாகசேனனிடம் "நீ அந்தத் தீவிற்குப் போய் செந்நிறக் குகை வாசலுக்குப் போ. அங்கு நிற்கும் காவலாளியிடம் 'சனி போய்விட்டான்' என்று கூறு. அதுதான் அடையாளம் காட்டும் சொல். அவன் உன்னோடு குகைக்குள் செல்வான். இருவருமாக சிறைப்பட்டுள்ள மன்னனைக் கொன்று விடுங்கள். நாளைய மறுநாள் முகூர்த்தநாள். அன்றுதான் அரசகுமாரியை மணந்து கொள்வேன். உனக்கு சேனாதிபதிப் பதவியை அளிப்பேன்" என்றான். இதுகேட்டுத்தான் நான் கவலையாக இருக்கிறேன்."




அரசகுமாரி இவ்வாறு கூறியதும் சிவசாமி "கவலைப்படாதீர்கள். இந்த துரோகிகளை நான் ஒழிக்கிறேன்" என்றான். அப்போது அரசகுமாரி "இன்னும் சற்று நேரத்தில் உன்னைப் பிடிக்க வருவான். நீ இப்போதே இந்த சன்னல் வழியாகக் குதித்துத் தப்பிவிடு. நீ எங்கோ ஓடிவிட்டதாக அவனிடம் சொல்லி விடுகிறேன்" என்றாள். சிவசாமியும் சன்னல் வழியாகக் குதித்து கடற்கரைக்குச் சென்று அப்போதே ஒரு மீனவனுக்குப் பணம் கொடுத்து அவன் படகில் செந்நிற குகையுள்ள தீவிற்குச் சென்றான்.

அவன் தீவை அடைந்தபோது காலையாகி விட்டது. அப்போது கரையில் நின்ற ஒரு முண்டாசுப் பேர்வழி "யாரடா நீ? கடல் கொள்ளைக்காரனா?" என்று கேட்டான் அப்போது சிவசாமி சற்றும் தயங்காமல் 'சனி போய் விட்டான்' என்று கூறினான்.

அதைக்கேட்ட முண்டாசுக்காரன் திகைத்துப் போய் "இது எனக்கும் நாகசேனனுக்கும் மட்டுமே தெரிந்த சொல். உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான். சிவசாமியும் "ஏய்! நாகசேனப் பிரபு என்று மரியாதையாகப் பேசு. அவரை அவமதிக்காதே" என்றான்.

அப்போது முண்டாசுக்காரன் "என்ன உளறுகிறாய்?" என்றான். சிவசாமியும் "இனி நாக

சேனன்தான் நாட்டு மன்னர். அவர் நேற்றிரவு சேனாதிபதி தீர சேனனின் உணவில் விஷத்தைக் கலந்து விட்டார். அது பனி ரெண்டு மணி நேரத்திற்குப் பிறகு அவனை சாகடித்து விடும். அவன் இறந்தால் சனி போய் விட்டான் என்று நாகசேனர் அரசகுமாரியை மணந்து கொண்டு இந்நாட்டின் மன்னனாகி விடுவார்'' என்றான்.

முண்டாசுக்காரனின் தலை சுழன்றது. அவன் தன் நினைவை இழந்து கீழே விழுந்தான். உடனே சிவசாமி அவனது வாளை எடுத்துக் கொண்டு அவனைப் படகிலிருந்த கயிற்றைக் கொண்டு வந்து கட்டிப்போட்டான். பிறகு அவன் காவல் காப்பவர்களிடம் ''குகையிலிருந்து மன்னனை கொண்டு வந்து படகில் ஏற்றுங்கள்'' என்றான். அவர்களும் மன்னனைக் குகையிலிருந்து அழைத்து வந்து படகில் ஏற்றினார்கள். முண்டாசுக் காரன்தான் தீரசேனன் என அவன் மன்னனுக்குக் காட்டி அவனையும் படகில் தூக்கிப் போட்டுக் கொண்டு படகைக் கரைக்குச் செலுத்தச் சொன்னான்.

மன்னனும் ''இவனை துரோகி என எப்படிக் கண்டுகொண்டாய்?'' எனக் கேட்கவே சிவசாமியும் தான் அரசகுமாரியிடமிருந்து அறிந்து கொண்டதைக் கூறி ''இவனை இங்கே எதிர்பார்த்தேன். அதனால் இவனிடம் நாகசேனன் இவனுக்கு விஷம் கொடுத்தான் எனப் பயமுறுத்தினேன். இவன் பயந்து விழவே கயிற்றால் கட்டிப் போட்டு விட்டுத் தங்களை விடுவித்தேன்'' என்றான்.

மன்னன் சிவசாமியைப் பாராட்டினான். கரைசேர்ந்ததும் தீர சேனனையும் நாகசேனனையும் சிறையில் அடைத்தான். புத்தி சாலியும் தைரியசாலியுமான சிவ சாமிக்கே தன் மகளை மணமுடித்து வைத்தான்.






## 2

*[மாணிக்கபுரியில் நடந்த வசந்தோற்சவத்தில் கலந்து கொண்ட மலைச் சாதி இளைஞன் உத்தமன் ஒரு மலர்ச் செண்டை இளவரசி பிரியம்வதைக்கு அளித்தான். அம்மலர்கள் பல நாட்களாகியும் வாடாமல் நறுமணம் வீசவே அச்செடிகளை கொண்டு வரும்படி மன்னன் பிரதாபவர்மன் தன் வீரர்களை அனுப்பினான். அவர்களால் செடிகளைக் கொண்டு வர முடியவில்லை. மலர்களை மட்டுமே கொண்டு வந்தார்கள். ராஜகுருவோ அம்மலர்களால் கெடுதல் விளையும் என்றார். அப்போது—]*

பிரதாபவர்மன் அப்போது "குருவே! இவ்வளவு அழகிய நறுமணம் வீசும் மலர்களா கெடுதலை விளைவிக்கக் கூடியவை?" என்று கலவரப்பட்டவாறே கேட்டான்.

ராஜகுருவும் "ஆமாம். இதுபற்றி விளக்கமாகக் கூறவேண்டும். இந்த மலர்கள் இளவரசியிடம் உள்ளன அல்லவா? உடனே எல்லா மலர்களையும் அரண்மனையிலிருந்து அப்புறப்படுத்துங்கள். இளவரசியையும் உடனே இங்கே வரச் சொல்லுங்கள்" என்றார்.

பிரதாபவர்மனும் "தங்களது கட்டளைப்படியே நடக்கிறேன். ஆனால் ஒரு விஷயம் தங்களிடம் கேட்க விரும்புகிறேன். அந்த மலர்கள் கெடுதல் விளைவிக்கக் கூடியவை என்பதனைச் சற்று விளக்கமாகக் கூறவேண்டும்" என்று



மன்னனும் "ராஜகுரு நீ மிகவும் விரும்பிய நூறாண்டிற்கு ஒரு முறை மலரும் மலர் பற்றி விவரமாக நமக்குச் சொல்லப் போகிறார். அதை நீயும் கேட்கவேண்டும் என எண்ணியே உன்னை அழைத்து வரச் சொன்னேன்" என்றான். அவளும் "அப்படியா! நானும் அவர் சொல்வதை கவனமாகக் கேட்கிறேன்" என்று கூறி ராஜகுருவைப் பார்த்தாள்.

ராஜகுரு இரண்டொரு நிமிடங்கள் பேசாமல் ஏதோ யோசித்தார். பிறகு அவர் சொல்லலானார்.

"இந்த மலர் முன்பெல்லாம் மற்ற எல்லா மலர்களைப் போலவே பூத்துக் கொண்டிருந்தது. அது மலர்ந்த பின் பல நாட்கள் வரை இதன் மணமும் குன்றாமல் இருக்கும். பல நூறாண்டுகளுக்கு முன் உங்கள் வம்ச மன்னன் சந்திரகாந்தவர்மன் என்பவன் மாணிக்கபுரியை ஆண்டு வந்தான். அவன் நீதி தவறாதவன். வீரமும் தைரியமும் கொண்டவன். அவனுக்கு சந்திரகேது என்ற தம்பி இருந்தான். அவன் சந்திரகாந்தனுக்கு முற்றிலும் நேர்மாறான குணங்கள் கொண்டவன். அவன் தன் அண்ணனின் ஆட்சிக்கு ஏதாவது கெடுதலைச் செய்ய வேண்டும் எனத் தீர்மானித்துக் கொண்டான். இதற்காகப் பல ஊர்களில் அவன்

வேண்டினான்.

ராஜகுருவும் "ஆகா! தாராளமாகச் சொல்கிறேன். இளவரசியும் வந்து விடட்டும். அவளும் இதைத் தெரிந்து கொள்வது நல்லது" என்றார். மன்னனது கட்டளைப்படி வீரர்கள் போய் இளவரசியை அழைத்து வந்தார்கள். இளவரசியும் பயபக்தியுடன் ராஜகுருவை வணங்கினாள்.

ராஜகுருவும் அவளை ஆசீர்வதித்து உட்காரச் சொன்னார். அவளும் அமர்ந்து கொண்டே தன் தந்தையிடம் "அப்பா! என்னை இங்கே வரச் சொன்னீர்களே. அதற்கு என்ன காரணமோ?" என்று கேட்டாள்.

சுற்றி அலைந்து முடிவில் நாட்டின் வடகிழக்கு எல்லையை அடைந்தான். அங்கு அவன் மலை வாழ் மக்களுடன் நன்கு பேசிப் பழகினான். அவன் நெருங்கிப் பழகியவர்களுள் நாகாம்பி என்பவனும் ஒருவன். அவன் மந்திர தந்திரங்கள் கற்றவன். அவனிடமிருந்து சந்திரகேது சில மந்திரங்களைக் கற்றுக் கொண்டான்.

ஒருநாள் நாகாம்பி ஒரு புது வித மலர்களைப் பறித்து கொதிக்கும் நீரில் போட்டுக் காய்ச்சுவதைச் சந்திரகேது கண்டான். அதே நீரை நாகாம்பி பல நாட்கள் காய்ச்சி அதிலிருந்து நறுமணமான தைலம் தயாரித்ததைத் அவன் கவனித்தான். அந்தத் தைலத்தை ஒருவன் யார்மீதிலாவது தெளித்தால் அந்தத் தைலம் பட்டவன் அதனைத் தெளித்தவன் சொல்கிறபடி எல்லாம் நடப்பானாம். இதனைச் சந்திரகேது நாகாம்பியிடமிருந்து அறிந்து கொண்டான்.

சந்திரகேது அந்த மலர்களை நிறையப் பறித்து எடுத்துக் கொண்டு சந்தோஷத்துடன் மாணிக்கபுரியை அடைந்தான். அங்கு அந்த மலர்களைக் கொண்டு பிறரை வசீகரிக்கும் தைலத்தைச் சில நாட்களில் தயாரித்தான். முதலில் அந்தத் தைலத்தை சாதாரண மனிதன் மீது தெளித்து அது பயனளிக்கிறதா என்று பார்த்து விட்டுப்



பிறகு அதைத் தன் அண்ணனான சந்திகாந்தவர்மன் மீது தெளித்து அவனைத் தன் இஷ்டப்படி ஆட்டி வைப்பது என்று தீர்மானித்துக் கொண்டான்.

ஆனால் அவன் நினைத்தபடி நடக்கவில்லை. எப்போதுமே நாம் ஒன்று நினைக்க அதைக் கடவுள் வேறுவிதமாக்கி விடுகிறார் என்பது கண்கூடு.

அவ்வூரின் அம்பிகை ஆலயத்தின் அர்ச்சகர் அங்கபட்டர். அவருக்கு அழகான மகள் ஒருத்தி இருந்தாள். அவள் பெயர் பாக்கியம். சந்திரகேது அவளைப் பார்த்து மயங்கி விட்டான். அவள் அர்ச்சகரின் மகள் என்பதை அவன் அறிய



வில்லை. அவன் தான் தயாரித்த வசீகரத் தைலத்தை அவள் மீது தெளித்து அவளைத் தனதாக்கிக் கொள்ள எண்ணினான். ஒருநாள் பாக்கியம் தன் தோழிகளுடன் ஆற்றில் குளித்துவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தாள். அப்போது மறைந்திருந்து சந்திரகேது அவள் மீது தைலத்தை தெளித்தான்.

மறுவிநாடியே 'ஆ'வென அலறியவாறே அங்கும் இங்கும் பாக்கியம் ஓடலானாள். அவளது தோழிகள் அவளைப் பிடிக்க முயன்றனர். சிலர் அர்ச்சகருக்கு தெரிவிக்க ஓடினார்கள். வேறுசிலர் மறைந்திருந்த சந்திரகேதுவைப் பிடித்து கோவிலுக்கு இழுத்துக் கொண்டு போனார்கள். அவன் கையில் தைலப் பாத்திரம் இருந்தது.

கோவிலில் பூஜைக்கான ஏற்பாடுகளை அங்கபட்டர் செய்து கொண்டிருந்தார். திடீரெனப் பலர் கத்திக் கொண்டு கோவிலுக்குள் வருவது கண்டு அவர் கர்ப்பக் கிருகத்திலிருந்து வெளியே வந்து பார்த்தார். அவர் தன் மகளின் நிலை கண்டு திடுக்கிட்டார். அவர் அவளருகே போய் மெதுவாகத் தட்டி "பாக்கியம்! என்ன நடந்தது?" என்று கேட்டார்.

அவள் எதுவும் பேசவில்லை. அவள் மிரள மிரளப் பார்த்துத் தன் நினைவை இழந்து விட்டாள். அப்போது அவளது தோழிகள் சந்திரகேதுவைச் சுட்டிக் காட்டி "ஆற்றில் குளித்து விட்டு வந்து கொண்டிருந்த இவள் மீது அந்த மனிதன்தான் ஏதோ தெளித்தான். அதனால்தான் இவள் நிலை இப்படி ஆகிவிட்டது" என்றனர்.

அங்கபட்டரும் சந்திரகேதுவின் அருகே சென்று அவனிடம் "யார் நீ? என் மகளை ஏன் இப்படிச் செய்தாய்?" என்று கேட்டார். அவனும் "ஐயா! அவள் தங்களது மகள் என்பது எனக்குத் தெரியாது. மலைச்சாதியினன் கூறியபடி குறிப்பிட்ட ஒருவகை மலர்களைப் பறித்து வசீகரத் தைலம் தயாரித்தேன். அதன் சக்தி

யைப் பரீட்சிக்க ,அதனை இப் பெண்ணின் மீது தெளித்தேன். என்னை மன்னித்து விடுங்கள். இவள் உங்கள் மகள் என்பது எனக்குத் தெரியாது'' என்றான்.

அங்கபட்டர் எதுவும் கூறாமல் கர்ப்பக்கிருகத்துள் சென்றார். அவர் அம்பிகைக்கு அணிவித்த மலர்மாலையைக் கையில் எடுத்துக் கொண்டு ''தேவி! இதுவரை நான் எனக்கென உன்னிடம் எதையும் கேட்டதில்லை. என் ஒரே மகளுக்கு நேர்ந்த கதியை நீயே பார். அவளை நீதான் காக்க வேண்டும். இவளை இந்த கதிக்குக் கொண்டு வந்த இந்த மனித ராட்சஸன் அழிய வேண்டும். என் மகளுக்குக் கெடுதல் செய்த அந்த மலர் இனி பூக்கவே கூடாது'' என்று ஆவேசத்தோடு கூறி தன் கையிலிருந்த மாலையிலிருந்து பூக்களைப் பிய்த்துச் சந்திரகேதுவின் மீது எறிந்தார்.

மறுநிமிடம் அங்கபட்டர் முன் அம்பிகை தோன்றி ''நீ கோரியபடி எல்லாம் நடக்கும். உன் மகளுக்கு ஒரு கெடுதலும் நேராது. இவனை நீ மனித ராட்சஸன் என்றதால் இவன் ராட்சஸப் பிசாசாகத் திரியட்டும். இந்த மலர் இவனுக்கு உதவியதால் இது மற்ற மலர்களைப் போல மலராமல் நூறு வருடங்களுக்கு ஒருமுறை தான் மலரும். இந்த மலர் செடியை யாராவது எடுத்து வளர்த்தால் அவர்களுக்கும் கெடுதல் வரும். சரி





இனி நீ நடந்ததை மறந்து எனக்கு அர்ச்சனை செய்'' என்றாள்.

அம்பிகை தோன்றியதும் கூறியதும் அங்க பட்டரால் மட்டுமே பார்க்கவும் கேட்டகவும் முடிந்தது. அவர் திருப்தி அடைந்தவராய் கர்ப்பக்கிருகத்துள் சென்று பூஜையை முடித்துவிட்டு வெளியே வந்தார். அப்போது அவரது மகள் மலர்ந்த முகத்துடன் எழுந்து வந்து அவரருகே நின்றாள். அப்போதுதான் சந்திரகேது யார் என்பதும் எல்லோருக்கும் தெரிந்தது. அவன் அங்கிருந்து ஓடமுயன்றபோது அவன் பிசாசாகி விட்டதை யாவரும் கண்டனர்.

மன்னன் சந்திரகாந்தனுக்குத் தன் தம்பியின் ஈனச் செயல் பற்றித் தெரியவே அவன் வெட்கினான். அங்கபட்டரும் மன்னனைக் கண்டு நடந்ததை விவரமாகக் கூறி மன்னிப்புக் கேட்டார். மன்னன் அவரைத் தேற்றி "உங்கள் மகள் என் மகளோடு சேர்ந்து அரண்மனையில் சுகமாக இருக்கட்டும். கொஞ்ச நாட்களானதும் நீங்கள் அழைத்துக் கொண்டு போகலாம்'' என்றார். அங்கபட்டரும் அவ்வாறே செய்தார்.''

ராஜகுரு இதனைக் கூறி "நான் இந்த விவரங்களை எல்லாம் நம்மிடமுள்ள ராஜவம்ச வரலாறு என்ற ஓலைச் சுவடியில் சந்திர காந்தவர்மனைப் பற்றி நிறையக் குறிப்பிடப்பட்டிருந்ததைப் படித்தேன். அம்பிகை சபித்த நூறாண்டிற்கு ஒருமுறை மலரும் மலர் பற்றிய விவரங்களையும் அறிந்தேன். நம்நாடு நல்ல நிலையில் இருக்க வேண்டும் என்பதற்காக அரண்மனையில் அந்த மலர்ச் செடியை வளரவிடக்கூடாது எனச் சொல்ல வேண்டியது என் கடமை என நினைத்தே கூறினேன்'' என்றார்.

ராஜகுரு சொன்னதைப் பிரதாப வர்மனும் பிரியம்வதையும் கேட்டனர். அந்த மலர்களுக்கும் தங்கள் முன்னோர்களுக்கும் தொடர்பு இருந்தது எனக்கேட்டு அவர்கள் வியப்படைந்தார்கள்.

பிரியம்வதையும் ராஜகுரு

கூறியபடி அந்த மலர்களால் யாருக்கும் எந்தக் கெடுதலும் ஏற்படக் கூடாது என நினைத்தாள். அந்த மலர்ச் செடிகளை அரண்மனையில் வளர்க்கும் எண்ணத்தையே விட்டுவிட்டாள். அதுமட்டுமல்ல. தன்னிடம் உள்ள அந்த மலர்களை எல்லாம் வெகுதூரத்தில் கொண்டு போய்ப் போட்டு அழித்துவிடச் சொல்ல வேண்டும் என்றும் எண்ணிக் கொண்டாள்.

அப்போது பிரதாபவர்மன் தன் மகளிடம் ''பிரியம்வதையே! அந்த மலர்களை எல்லாம் அள்ளி எடுத்துக் கொண்டு போகும்படிக் கூறி விடுகிறேன். இவ்வளவு அழகிய மலர்கள் கெடுதல் விளைவிக்கக் கூடியவை என்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது!'' என்றான்.

அப்போது ஒரு காவல் வீரன் மன்னன் முன் வந்து ''அரசே! தங்களைக் காண சேனாதிபதியார் காத்துக் கொண்டிருக்கிறார்'' என அறிவித்தான். மன்னனும் வரச் சொல் என்றான். எனவே சில நொடிகளில் சேனாதிபதியும் அங்கு வந்தான்.

மன்னனும் ''உன்னைப் பார்த்தால் ஏதோ ஒரு பிரச்னையை என் முன் எழுப்ப வந்திருப்பது தெரிகிறது. சொல் உடனே'' என்றான். சேனாதிபதியும் ''என்ன காரணமோ தெரியவில்லை. இன்று காலையிலிருந்து நம் நாட்



டின் தென்பகுதியிலுள்ள மக்கள் தங்கள் வீடு வாசல்களை விட்டு ஓடுகிறார்கள். அங்கு கடற்கரை ஓரமாக இருந்த வீடுகள் திடீரெனத் தரைமட்டமாகி விட்டன. இவ்வளவுக்கும் கடல் கொந்தளிப்பும் ஏற்படவில்லை. புயலும் அடிக்கவில்லை. எவ்வித சத்தமும் இல்லாமல் வீடுகள் அமுங்கி விட்டன. நல்லவேளையாக உயிர் சேதம் எதுவும் இல்லை. இப்படி நடக்க என்ன காரணம் என்று தெரியவில்லை'' என்றான்.

மன்னனும் ''சரி! பயந்து ஓடும் மக்களுக்கு ஏதாவது உதவி செய்தாயா?'' என்று கேட்டான். சேனாதிபதியும் ''சில வீரர்களை

கடற்கரைப் பகுதியைக் காவல் புரிய அனுப்பி இருக்கிறேன். சந்தேகிக்கப்படும் முறையில் திரிபவர்களைக் கைது செய்யச் சொல்லி இருக்கிறேன். ஒரு பெரிய துயரத்தில் ஆழந்துள்ள மக்களுக்கு நிவாரணப் பணிகள் செய்யுமாறு அனுப்பியுள்ளேன். அகதிகள் முகாம்களையும் அமைக்கச் சொல்லி இருக்கிறேன். இது பற்றி அறிவிக்கவே நான் வந்தேன்'' என்றான்.

மன்னனும் ''அகதிகளை நன்கு கவனிக்க வேண்டும். இடம் போதவில்லை என்றால் அரசுக்குச் சொந்தமான எல்லா கட்டடங்களையும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். யாருக்கு எந்தக் குறையும் இல்லாது பார்த்துக் கொள்'' என்றான்.

சேனாதிபதியும் ''அப்படியே செய்கிறேன்'' எனவே பிரியம்வதையும் ''நம் அரண்மனைக் கூடங்களில் கூடப் பெண்களுக்கும் சிறுவர்களுக்கும் இடம் அளிக்கலாம்'' என்றாள். மன்னனும் ''நல்ல யோசனை. இதற்கான ஏற்பாடுகளை நீயே கவனி'' என்று தன் மகளிடம் கூறினான். பிறகு அவன் சேனாதிபதியைப் பார்த்து ''துன்பத்தில் சிக்கித் தவிப்பவர்களுக்குத் தக்க உதவியை உடனே செய். அவர்களது மறுவாழ்விற்கான திட்டங்களை யோசித்துத் தீட்டலாம்'' எனக் கூறினான்.

பிறகு மன்னன் ராஜகுருவிடம் ''தங்களது அறிவுரை என்னவோ?'' என்று கேட்கவே அவரும் சற்று யோசித்து ''சேனாதிபதி கூறியதைக் கொண்டு பார்த்தால் இந்த நூறாண்டுக்கு ஒருமுறை பூக்கும் மலர் வந்ததாலே இப்படி எல்லாம் நடக்கிறதோ என அஞ்சுகிறேன். உம். இன்னும் ஏதாவது நடக்கிறதா என்று பார்க்கலாம்'' எனக் கூறிப் பெருமூச்சு விட்டார்.

(தொடரும்)






# இரு நண்பர்கள்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ யாராவது பெரியவரின் பேச்சைக் கேட்டு அதன்படி நடக்க இந்த நடுநிசியில் பயங்கரமான இந்த மயானத்திற்கு வந்தாயா? சில சமயங்களில் பெரியவர்கள் கூறியபடி ஒருவன் நடந்து வெற்றி பெற்றுவிட்டால் அந்த வெற்றி தமதே எனப் பெருமை அடித்துக் கொள்வார்கள். ஆனால் அவன் தோற்று விட்டால் அந்த பெரியவர்கள் அவன் ஏதோ ஒரு விதத்தில் தவறு செய்து விட்டான் எனக் கூறித் தப்பித்துக் கொள்

## வேதாளம் சொல்லும் கதை



வார்கள். இதை விளக்க தனகுப்தன் என்ற வியாபாரியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

ஒரு நகரில் இருந்த தனகுப்தன் என்ற வணிகன் கப்பல்களில் சரக்கு ஏற்றி அயல்நாடுகளுக்குப் போய் வியாபாரம் செய்து வந்தான். அவன் வியாபாரம் பெருகி நல்ல லாபம் கிடைக்கவே அவன் தனக்கெனக் கப்பல் வாங்கிக் கொண்டு அதில் சரக்குகளை ஏற்றி வியாபாரம் செய்து வரலானான். அவனது கப்பலில் மற்ற வியாபாரிகளும் தம் சரக்குகளை ஏற்றி அயல் நாடுகளுக்கு அனுப்பி வந்தனர்.

ஒருமுறை அவன் தன் சரக்குகளையும் மற்ற வியாபாரிகளின் சரக்குகளையும் தன் கப்பலில் ஏற்றிச் சென்று கொண்டிருந்தபோது அக்கப்பல் நடுக்கடலில் மூழ்கி விட்டது. அவனுக்கு நஷ்டம் ஏற்பட்டதோடு மற்ற வியாபாரிகளுக்கும் அவன் நஷ்டஈடு கொடுக்க வேண்டியதாயிற்று. அதனால் அவன் தான் சம்பாதித்ததை எல்லாம் இழந்து விட்டான். அவன் வசித்து வந்த பெரிய வீடு ஒன்று தான் அவனுக்கு மிஞ்சியது. அந்த வீட்டின் பேரிலும் அவன் பத்தாயிரம் வராகன்கள் கடன் வாங்கி இருந்தான். கடன் கொடுத்தவன் தன் பணத்திற்காக நெருக்கலானான்.

இந்த நிலையில் தனகுப்தன் தன் மகன் குணசீலனிடம் ''இப்போது மறுபடியும் வியாபாரம் செய்ய கொஞ்சம் முதல் போட்டால் போதும். இந்த ஊரில் நான் யாரிடமும் பணம் கடன் வாங்க முடியாது. நீயும் சொந்த ஊரான பொன்னூருக்குப் போ. அங்கே நந்தகுப்தன் என்ற தூரத்து உறவினர் இருக்கிறார். ஒருவகையில் அவர் உனக்குத் தாத்தா முறை. அவர் கோடீஸ்வரர் அவரிடம் நீ இருபத்தையாயிரம் வராகன்கள் கேட்டு வாங்கி வா. அவர் ஊரில் இல்லை என்றாலும் இரண்டு நாட்கள் இருந்து அவரைக் கண்டு பணத்

தோடு புறப்பட்டு வா'' என்றான்.

குணசீலனும் மறுநாள் பொன் னூருக்குக் கிளம்பலானான். அப் போது அவனது தந்தை ''நீ இன்று மாலை முத்தூரை அடைவாய். அங்கே என் ஆருயிர் நண்பன் நாராயணன் இருக்கிறான். அவன் வீட்டில் இரவில் தங்கு. ஆனால் அவனிடம் நம் கஷ்ட நிலையைக் கூறாதே. மறுநாள் காலை கிளம்பி பொன்னூர் போ. அங்கே நந்தகுப் தன் இல்லாவிட்டால் அவன் வரும் வரை என் மற்றொரு உயிர்த் தோழ னான கோவிந்தனின் வீட்டில் தங்கு. ஆனால் அவனிடமும் நம் நிலைமையைக் கூறாதே. இந்த இரு நண்பர்கள் மட்டும் என் நிலையைத் தெரிந்துகொண்டால் தம் தலையை அடகு வைத்தாவது பணத்தை எனக்குக் கொடுத்து அனுப்பி விடு வார்கள். அவர்களுக்குத் தொல்லை கொடுக்கக் கூடாது'' என்று கூறி அனுப்பினான்.

தன் தந்தை கூறியபடியே பய ணம் செய்து குணசீலன் மாலை யாகும் போது முத்தூரை அடைந் தான். அங்கு அவன் நாராயண னின் வீட்டிற்குப் போகவே அவ னும் குணசீலனை அன்புடன் வர வேற்று அவனிடம் பேச்சுக் கொடுத்து தனகுப்தனின் கை நொடித்துப் போனதைத் தெரிந்து கொண்டான். அவன் ''இந்த நிலை யில் உன் தகப்பனார் எங்களிடம்



பணம் கேளாமல் அந்தக் கஞ்சப் பயல் நந்தகுப்தனிடமா கேட்டு வாங்கி வரச் சொன்னார்? அவன் உன் தந்தையையே ஏமாற்றியவனா யிற்றே! அவனா இப்போது பணம் கொடுப்பான்?'' என்று கேட்டான்.

குணசீலனோ ''என் தந்தை பணத்தை உங்களிடம் கேட்கவே கூடாது என கூறியிருக்கிறார்'' என்றான். அப்போது நாராயணன் ''உன் தந்தை நல்ல நிலையிலிருந்த போது அவரிடம் பண உதவி பெற்றேன். அந்தப் பணத்தை இதுவரை திருப்பிக் கொடுக்கவே இல்லை. இப்போது உன் தந்தை கஷ்டப்படும் போது அந்தப் பணத்தையாவது நான் திருப்பிக்



கொடுக்க வேண்டாமா? நான் வாங்கியது ஐயாயிரம் வராகன். அதை நான் கொடுக்கிறேன். நீ வாங்கிக் கொண்டு போ'' என்றான்.

குணசீலனும் தான் பொன்னூருக்குப் போய்விட்டுத் திரும்பி வரும்போது பணத்தை வாங்கிக் கொள்வதாகக் கூறினான். மறு நாள் அங்கிருந்து கிளம்பி அவன் பொன்னூரை அடைந்தான். அங்கு நந்தகுப்தன் ஊரில் இல்லாததால் அவன் கோவிந்தனின் வீட்டிற்குச் சென்றான். அவனும் குணசீலனை அன்புடன் வரவேற்று உபசரித்தான். பிறகு அவன் வந்த காரணத்தை விசாரித்து அறிந்து கொண்டு "நந்தகுப்தன் உன் தந்தையை ஏமாற்றிப் பணக்காரன் ஆனவன். வடிகட்டின கஞ்சன். இதெல்லாம் உன் தந்தைக்கும் தெரியுமே. அப்படி இருந்துமா அவனிடம் பணம் கேட்க உன்னை அனுப்பினார்? அவனுக்காக நீ காத்திருக்க வேண்டாம். உன் தந்தைக்குத் தேவைப்படும் பணத்திற்கு நான் ஏற்பாடு செய்கிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட குணசீலன் "எனக்கு உண்மையிலேயே என் தந்தையின் போக்கு ஆச்சரியத்தை விளைவிக்கிறது. உங்களை போலவும் முத்தூர் நாராயணனைப் போலவும் நல்ல நண்பர்கள் இருக்கும்போது உங்களிடம் பணம் கேட்காமல் அந்த நந்தகுப்தனிடம் அவர் ஏன் கேட்க வேண்டும்? இது எனக்குப் புரியவில்லை'' என்றான்.

கோவிந்தனும் "இந்த ஊரிலிருந்து யார் உன் தந்தை இருக்கும் நகருக்குச் சென்றாலும் அவர்களுக்கு இல்லை என்று கூறாமல் பண உதவி செய்வார். அவர் கொடுத்த பணத்தைத் திரும்பக் கேட்டு வாங்கிக் கொண்டதே இல்லை. நானும் இந்த ஊரிலுள்ள இன்னும் பலரும் உன் தந்தையிடமிருந்து பணம் பெற்றிருக்கிறோம். அதை எல்லாம் வசூலித்து நான் கொடுக்கிறேன். நீ அதை உன் தந்தையிடம் கொடு'' என்றான்.

கோவிந்தன் மறுநாளே தனகுப்தனிடமிருந்து பண உதவி பெற்ற

வர்களைச் சந்தித்து அவனது கஷ்ட நிலையைக் கூறினான். அவர்கள் யாவரும் தாம் தனகுப்தனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை கோவிந்தனிடம் கொடுத்தார்கள். கோவிந்தனும் அந்தப் பணத்தை குணசீலனிடம் கொடுத்து "மொத்தம் முப்பத்தையாயிரம் வராகன்கள் கிடைத்தன. இதனுடன் முத்தூர் நாராயணன் கொடுக்கும் ஐயாயிரம் வராகன்களையும் கொண்டு போய் உன் தந்தையிடம் கொடு" என்றான்.



குணசீலனும் அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டு முத்தூருக்குப் போனான். அங்கு நாராயணன் கொடுத்த பணத்தையும் வாங்கிக் கொண்டு தன் ஊரை அடைந்தான். அப்போது ஒரு கிழவன் அங்கே இருந்தான். தனகுப்தன் குணசீலனிடம் "இவர்தான் நந்தகுப்தன் பொன்னூரிலிருந்து ஏதோ ஒரு வேலையாக வந்த இவர் உடல் நலம் குன்றி இங்கு வந்தார். அவருக்கு வைத்தியம் செய்து குணமாக்கினேன். இவர் கொண்டு வந்த பணம் தீர்ந்துவிட்டது. அதனால் இவரை பொன்னூருக்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இவர் உறவுமுறையில் தாத்தா. இவரை வணங்கி ஆசிகள் பெற்றுக்கொள்" என்றான்.

குணசீலனும் நந்த குப்தனை வணங்கி அவனது பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தான். அதன் பிறகுதான் கொண்டுவந்த பணத்தை குணசீலன் தன் தந்தையிடம் கொடுத்து "உங்களுக்குப் பல நல்ல நண்பர்கள் இருக்கையில் இந்தக் கஞ்சப்பிரபு நந்தகுப்தனிடம் ஏன் பணம் கேட்கச் சொன்னீர்கள்?" என்று கேட்டான்.

அதற்கு தனகுப்தன் "உனக்கு உலகஞானம் ஏற்படவும் வியாபார முறைகளைக் கற்பிக்கவும் இவ்வாறு செய்தேன். நந்தகுப்தனிடம் உன்னைப் போகச் சொன்னதும் அந்தக் காரணத்திற்காகத் தான்" என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! தனகுப்தன் தன் நல்ல

நண்பர்களிடம் பணம் கேட்க வேண்டாம் எனக்கூறி மோசக்காரனும் கஞ்சனுமான நந்தகுப்தனிடம் குணசீலனை ஏன் பணம் கேட்கச் சொன்னான்? இது ஏதோ உலக ஞானத்தையும் வியாபார முறைகளையும் கற்பிக்க என்று வேறு கூறினானே. இது சரியா? குணசீலன் மற்றவர்களிடமிருந்து பணம் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்ததும் தனகுப்தன் அதனை எவ்வித மறுப்பும் கூறாமல் பெற்று கொண்டானே. இது எவ்வகையில் நியாயமாகும்? இக்கேள்விகளுக்கு விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "தனகுப்தன் வாழ்க்கையில் நன்கு அடிப்பட்டவன். அவன் நந்தகுப்தனிடம் பணம் கேட்கிறான் என்பதை அவனது நண்பர்கள் அறிந்ததும் அவனது கஷ்டநிலையை அவர்கள் புரிந்து கொண்டார்கள். அந்த நிலையிலும் தனகுப்தன் தங்களிடம் தாம் கொடுக்க வேண்டிய பணத்தைக் கேட்காமல் இருந்தது அவனது உயர் குணத்தைக் காட்டுவதாக உள்ளது என அவர்கள் எண்ணினார்கள். அதனால் அவர்களாகவே முன்வந்து தாம் தனகுப்தனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை குணசீலனிடம் கொடுத்து அனுப்பினார்கள். அவர்கள் மிகவும் நல்ல நண்பர்கள் என்பதை எடுத்துக் காட்டவே தனகுப்தன் நந்தகுப்தனை உபயோகித்துக் கொண்டான். அவனது இந்தச் செயல்கள் குணசீலனுக்கு உலக ஞானத்தையும் பணம் வசூலிக்கும் முறையையும் கற்றுக் கொடுத்தான்" என்றான்.

விக்கிரமனது சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக்கொண்டது.






# கடனை வசூலிக்க வழி?

விநாயகம் ஊராரிடம் எல்லாம் கடன் வாங்கியவன். வாங்கின கடனை திருப்பிக் கொடுக்கும் பழக்கம் அவனிடம் இல்லை. ஏதோ சாக்குப்போக்கு சொல்லி விடுவான். அவனுடன் எப்போதும் நான்கு பேர்கள் திரிந்து கொண்டும் இருப்பார்கள்.

ஒருநாள் அவன் தன் ஆட்களோடு கடைத்தெருவில் போகையில் பாலக்காடு பரமேஸ்வரனின் பட்சணக் கடையிலிருந்து நெய் வாசனை கமகமவென்று வீசியது. அவ்வளவுதான். விநாயகம் தன் ஆட்களுடன் கடைக்குள் நுழைந்து விட்டான். அவன் "என்ன பரமேஸ்வரரா! என்ன அல்வாவா கிளறிக் கொண்டிருக்கிறாய்? நெய் வாசனை ஊரையே தூக்கி அடிக்கிறதே!" என்றான்.

பரமேஸ்வரனும் "மைசூர்பாகு கிளறி கொண்டிருந்தேன். இந்தா ருசிபார்" என்று கூறி ஒரு கட்டியை எடுத்துவிண்டு அவனுக்கும் அவனது ஆட்களுக்கும் கொடுத்தான். விநாயகமும் அவனது ஆட்களும் அதைச் சாப்பிட்டு கடைத் தட்டுகளிலுள்ள மற்ற பட்சணங்களையும் தம் இஷ்டத்திற்கு எடுத்துச் சாப்பிட்டார்கள். அவர்களுக்கு என்ன கவலை? காசுதான் கொடுக்கப் போவதில்லையே.

பரமேஸ்வரன் கிண்டன். அவன் அந்தக் கூட்டம் சாப்பிட்டதற்கு எல்லாம் கணக்கு போட்டான். விநாயகமும் "நாங்கள் சாப்பிட்டதற்கு என்ன கணக்கு?" என்று கேட்கவே பரமேஸ்வரனும் "மொத்தம் ஐம்பது ரூபாய்" என்ருன். உடனே விநாயகம் சட்டைப் பைக்குள் கைவிட்டு "அடடா! சட்டையை மாற்றிப் போட்டுக் கொண்டு

—கி. சந்தியா—

வந்துவிட்டேன் போலிருக்கிறதே. அப்புறமாக இந்தப் பக்கம் வரும் போது கொடுக்கிறேன்'' என்றான்.

பரமேஸ்வரனுக்கா விநாயகத்தின் நடிப்பு பற்றித் தெரியாது? அவனும் ''எனக்கு ஞாபக மறதி அதிகம். அதனால் இந்த சுவற்றில் விநாயகத்தின் பாக்கி ஐம்பது ரூபாய் என்று எழுதி வைத்துக் கொள்கிறேன். அதைப் பார்க்கும் போதெல்லாம் உன் பாக்கி பற்றி நினைவிற்கு வரும்'' என்று கூறி வெள்ளைச் சுவரின்மீது கரித் துண்டால் கொட்டை எழுத்துக் களில் எழுதலானனான்.

அதைக்கண்ட விநாயகம் ''நிறுத்து. இவ்வளவு பெரிய எழுத் துக்களில் நீ எழுதினால் இங்கே வருபவர்கள் போகிறவர்கள் எல் லாம் அதைப் படிப்பார்கள். என் மானம்தான் போகும்'' என்றான். பரமேஸ்வரனும் ''ஆமாம். இது பற்றி நினைக்கவே இல்லையே. ஒரு வேலை செய்கிறேன். சுவரில் எழுதும் எழுத்துக்களை உன் பட்டு அங்கவஸ்திரத்தைக் கட்டி மறைத்து விடுகிறேன். நீ பணம் கொடுத்த உன் அங்கவஸ்திரத்தை எடுத்துக் கொண்டு போய்விடு. நானும் சுவ ரில் எழுதியதை அழித்து விடு கிறேன்'' என்றான்.

விநாயகத்திற்கு என்ன செய்வ தென்று தெரியவில்லை. பணம் கொடுக்கா விட்டால் பரமேஸ் வரன் சுவரில் கொட்டை எழுத்துக் களில் எழுதி ஊர் சிரிக்க வைத்து விடுவான். கடையிலிருந்து பணம் கொடுக்காமல் போக வேண்டு மானால் தன் பட்டு அங்கவஸ்திரத் தைக் கொடுத்தாக வேண்டும். அப் போதும் அவன் மானம் போகும்.

பேசாமல் இடுப்பில் சொருகி வைத்திருந்த பணத்திலிருந்து ஐம் பது ரூபாயை எடுத்து அவன் பர மேஸ்வரனிடம் கொடுத்துவிட்டுக் தன் ஆட்களுடன் சென்றான். பரமேஸ்வரன் அவர்களை பார்த்து சிரித்துக்கொண்டே நின்றான்.



# அம்புலிமாமா அனுபந்தம்—55

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## மீன் கொத்திக் குருவிகள்



சில பறவைகளே மரங்களில் அல்லாது தரை மீது கூடுகளைக் கட்டும். இவற்றுள் இக் குருவிகளைக் குறிப்பிடலாம். சாதாரணமாக இவை கால்வாய்க் கரைகளில் ஒரு மீட்டர் ஆழத்தில் பள்ளம் தோண்டி அதில் தம் முட்டைகளை இடுகின்றன.

உலகில் இக்குருவிகளில் நூற்றுக்கும் மேற்பட்ட வகைகள் உண்டு. அவற்றில் குறிப்பாக மைனா போல இருக்கும் வயிறு வெள்ளையாக உள்ளவைவற்றையே கூறலாம். இவற்றின் இறகுகள் நீல நிலத்தில் பளபளப்பாய் இருக்கும். இவற்றின் மூக்கு சிவப்பாயும் இருக்கும். இவை மீன்களையும் தவளைகளையும் கொத்தித் தின்னும். நீரின் மேல் மட்டம் வரை தொங்கும் மரக்கிளைகளில் இவ்வ அமர்ந்து நீரில் தம் உணவு இருப்பதைக் கண்டதும் பாய்ந்து அவற்றைப் பிடித்து எடுத்துப் போய் உறுதியான கிளை மீதோ கல்லின் மீதோ அடித்துக் கொன்று தின்கின்றன.

இவற்றில் கருப்பு வகையும் வெள்ளை வகையும் தம் உணவை வேட்டையாடுவதில் மிகவும் சுறுசுறுப்பானவை. நீரின் மேற்பரப்பில் ஓரிடத்திலிருந்து மறு இடத்திற்கு இவ்வகைக் குருவிகள் தத்திச் சென்று தம் உணவைக் கண்டதும் பாய்கின்றன.

இமயமலைப் பகுதியில் காணப்படும் இவ்வகைக் குருவிகளே சற்றுப் பெரியவை. இவை கடல் மட்டத்திலிருந்து 800 மீட்டர் உயரத்தில் வாழ்கின்றன.



# நம் தற்கால இலக்கியம்

பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.

ஆசிரியர்

## பி. காந்தாராவின் 'தகா படின தம்முடு'



புல்லய்யா தன் கிராமத்தில் சிலம்பத்திலும், புலி ஆட்டத்திலும் சிறந்து விளங்கி ஊராரையே அதிர அடித்தான். அவன் தான் கல்யாணம் செய்து கொண்டு தன்னைவிடப் பேரும் புகழும் பெறும் மகனைப் பெற விரும்பினான். பொய் பேசுபவர்களையும் திருடுபவர்களையும் அவன் வெறுத்தான். தனக்குப் பிறக்கும் மகன் திருடர்களைப் பிடிக்க வேண்டும் எனவும் அவன் எண்ணினான்.

புல்லய்யா நீலி என்ற பெண்ணை விரும்பி மணந்து கொண்டான். நீலியும் தன் கணவனைப் போல நேர்மையை விரும்புபவள். ஏழைத் தம்பதிகளான அவர்கள் நல்வாழ்க்கை நடத்தி வந்தார்கள். பாடுபட்டு உழைத்துப் பணம் சம்பாதித்தார்கள். அவர்கள் தமக்குப் பிறந்த மகனுக்கு மல்லன் என்று பெயரிட்டார்கள்.

நாட்டில் பஞ்சம் ஏற்படவே அரசு அப்பகுதியில் விளையும் தானியத்தை வாங்கி மற்றப் பகுதிகளில் வினியோகிக்கத் தீர்மானித்தது. புல்லய்யா இதனைச் சரியான ஏற்பாடாக நினைக்கவில்லை. தானியம் கொள்முதல் செய்ய வந்த அரசாங்க அதிகாரிகளை அவன் தடுத்தான். அதனால் போலீசார் அவனைக் கைது செய்தார்கள்.

தன் கணவனைச் சிறையிலிருந்து மீட்க நீலி தன் நிலத்தை அவ்வூர் பணக்காரர் ராஜுவிடம் அடமானம் வைத்துப் பணம் வாங்கினாள். அதற்கு அநியாய வட்டி கொடுக்க வேண்டி வந்தது. புல்லய்யா சிறையிலிருந்து வெளியே வந்தான். ஆனால் அன்றிரவு

பணக்கார ராஜுவை யாரோ தாக்கி அடிக்கவே அதனைப் புல்லய்யா தான் செய்தான் என்று கூறி போலீசார் அவனை மீண்டும் கைது செய்தார்கள்.

புல்லய்யா மீண்டும் விடுதலை பெற தன் நிலத்தையே விற்க வேண்டியதாயிற்று. ஊரில் வேலை இல்லாததால் புல்லய்யா தன் மனைவியையும் மகனையும் அழைத்துக் கொண்டு பட்டணத்தை அடைந்தான். புல்லய்யா கஷ்டங்களை அடுத்தடுத்து அனுபவிக்க வேண்டியதாயிற்று. அவன் ஏதேதோ வேலைகளைச் செய்தும் குடும்பம் நடத்தப் போதிய வருமானம் கிடைக்கவில்லை.



தன் மனைவியும் மகனும் பசியால் வாடுவதைக் கண்டு அவன் மனம் புழுங்கினான். அப்போது புல்லய்யாவிற்கு இரு திருடர்கள் நண்பர்களானார்கள். நாளடைவில் அவனும் அவர்களோடு சேர்ந்து திருட ஆரம்பித்தான்.

ஒருநாள் மூவரும் சேர்ந்து ஒரு பணக்காரன் வீட்டில் திருடச் சென்றனர். ஏதோ சத்தம் தன்வீட்டில் ஏற்படுவது கேட்டு பணக்காரன் விழித்துக் கொண்டு துப்பாக்கியை எடுத்து அவர்களைச் சுட முயன்றபோது அவன் பின்னால் வந்த புல்லய்யா அவன் தலையில் ஓங்கி அடித்தான். துப்பாக்கி குறி தவறியது. மூன்று திருடர்களும் தப்பி ஓடிவிட்டார்கள்.

ஆனால் அன்றிரவு புல்லய்யா வீட்டைவிட்டுக் கிளம்பியபோது அவனது மகன் மல்லின் அவனுக்குத் தெரியாமல் அவனையும் அவனது இரு நண்பர்களையும் பின் தொடர்ந்து பணக்காரர் வீடு வரை வந்தான். அவர்கள் தப்பி ஓடியது கண்டு அவன் தன் வீட்டிற்குச் சென்றான்.

தன் தந்தை வெகு நேரமாகியும் வராதது கண்டு மல்லன் அப்பணக்காரனின் வீட்டிற்குப் போய் அழலானான். போலீசார் வந்து அவனை விசாரித்து முந்தைய இரவில் புல்லய்யாவும் அவனது இரு சகாக்களும்அங்கு வந்ததைத் தெரிந்து கொண்டார்கள். அவர்கள் வெகு எளிதில் மூன்று திருடர்களையும் பிடித்துவிட்டார்கள். இவ்வாறு தன் மகன் திருடர்களைப் பிடிப்பான் எனப் புல்லய்யா முன்பு எண்ணியது இப்போது நடந்து விட்டது!

பி. காந்தாராவின் இந்தப் புகழ்பெற்ற நாவலின் கதைச் சுருக்கம் இது. இதில் ஆந்திர கிராம வாழ்க்கை பற்றியும் தன் கிராமத்தை விட்டுப் பட்டணம் சேர்ந்த புல்லய்யாவின் கதியையும் அப்படியே இந்தப் புதினம் படம் பிடித்துக் காட்டுகிறது. இது பல இந்திய மொழிகளில் மொழி பெயர்க்கவும்பட்டுள்ளது.

# உங்களுக்குத் தெரியுமா?

1. வடஇந்தியாவில் பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கொண்டாடப்படும் விழா எது?
2. மனிதத் தலை, கைகள், குதிரை உடல் கொண்ட விசித்திரப் பிராணி எந்தப் புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது?
3. கஜராஹோ ஆலயங்கள் எங்கே உள்ளன?
4. டான்யூப் நதி எந்தக் கிழக்கு ஐரோப்பிய நகர் நடுவே பாய்கிறது.?
5. சோழர்களின் தலைநகர் எது?
6. தென்ஆசியாவில் ஒரு நாடு மட்டும் அன்னியர் ஆட்சியில் இருக்கவில்லை. அது எது?
7. கடல் கீழ்மட்டத்தை ஆதாரமாகக் கொண்ட மலை எது?
8. மெகஸ்தனிஸை எந்த கிரேக்க மன்னன் தன் தூதுவனாக எந்த இந்திய அரசரிடம் அனுப்பினான்?
9. ராப்லீசியா என்ற மலரின் சிறப்பு என்ன?
10. சாதாரண ஈ எவ்வளவு காலம் உயிர் வாழும்?
11. ஆப்பிரிக்காவில் மிகப் பெரிய ஏரி எது?
12. மனிதனின் மண்டை ஓட்டில் எவ்வளவு எலும்புகள் உள்ளன?
13. போர்த்துகீசியர் முதலில் ஸ்ரீலங்காவைக் கண்டபோது அதற்கு அளித்த பெயர் என்ன?
14. இந்துக்கள் புராணத்தில் மழைக்கடவுளின் பெயர் என்ன?
15. ஒரு சர்வாதிகாரி பள்ளி ஆசிரியராயும் பத்திரிகையாளராகவும் இருந்தவர். அவர் யார்?
16. அமைதிக்கான நோபல் பரிசை முதலில் பெற்றவர் யார்?
17. சீக்கியர்களின் புனித நூல் எது?
18. ஒரு மரத்திலிருந்து எடுக்கப்படும் திரவம் மலேரியாவைப் போக்கும் மருந்தாக உபயோகப்படுகிறது. அந்த மரம் எது?

## விடைகள்

1. கும்பமேளா.
2. கிரேக்கபுராணம்.
3. மத்தியப்பிரதேசம்.
4. புடாபெஸ்ட்
5. தஞ்சாவூர்
6. தாய்லாந்து
7. ஹவாயிலுள்ள மௌனாட்சிமலை இதன் உயரம் 32,000 அடி கடல் மட்டத்திற்கு மேல் 13,784 அடி உயரம் உள்ளது.
8. கிரேக்க மன்னன் செல்யூகஸ் சந்திர குப்த மௌரிய மன்னனிடம் அனுப்பினான்.
9. உலகிலேயே மிகப் பெரிய மலர். இது இந்தோனேஷியாவில் உள்ளது.
10. நான்கு நாட்கள்.
11. உகாண்டா, கென்யா, டான்ஜினியா, நாடுகளுக்கிடையே உள்ள விக்டோரியா ஏரி 27,000 சதுரமைல் பரப்பு..
12. 29 எலும்புகள்.
13. ஜுலான்.
14. வருணன்.
15. இத்தாலியின் முசலோனி
16. ஜான் ஹென்றிட் யூனான்ட் செஞ்சிலுவை சங்க நிறுவனர்.
17. ஆதிகிரந்த் (கிரந்தசாகப்)
18. சிங்கோனா மரம்



# கருமியின் காசு

பட்டணத்தில் பாப்பைய்யன் என்ற கருமி இருந்தான். யாருக்கும் பைசா கொடுக்க மாட்டான். பைசாவுக்குக் கணக்கு பார்ப்பான். ஒருநாள் தெரு வழியே போன போது கால் இடறி விழுந்து விட்டான். அவனிடமிருந்த பணம் சிதறி உருண்டு நாலா பக்கமும் விழுந்தது.

அவன் சட்டென எழுந்து கீழே விழுந்த நாணயங்களை எல்லாம் பொறுக்கி எடுத்து எண்ணிப் பார்த்தான். ஒரு ரூபாய் குறையவே சுற்றிலும் தேடிப் பார்த்தான். கிடைக்கவில்லை.

அவன் தன் மனைவியிடம் நடந்ததைக் கூறவே அவளும் ''இந்த ஊரில் எல்லோரும் நாணயஸ்தர்கள். உங்கள் ரூபாய் யாருக்குக் கிடைத்தாலும் அதை அவர் நகர நீதிபதியிடம் ஒப்படைத்து விடுவார். அதனால் சாயங்காலம் நீங்கள் நீதிபதியைச் சந்தித்தால் உங்கள் பணம் கிடைத்துவிடும்'' என்று கூறித் தேற்றினாள்.

பாப்பைய்யனின் அந்த ஒரு ரூபாய் புதராக செடிகள் வளர்ந்திருந்த இடத்தில் போய் விழுந்திருந்தது. அங்கு பாம்பு பிடிக்க வந்த பாம்பாட்டி வேம்பன் அதைக் கண்டு கையில் எடுத்தான். அது ஒரு ரூபாய் எனக் கண்டு உற்சாக மிகுதியால் சாராயம் குடிக்க ஒரு சாராயக் கடைக்குள் சென்றான்.

கடைக்காரனும் அந்த ரூபாயை வாங்கிக் கொண்டு சாராயத்தைக் கொடுத்து அனுப்பினான். அப்போது மலையன் என்ற பயில்வான் அந்தக் கடைக்கு வந்தான். சாராயக் கடைக்காரன் அவனைக் கூப்பிட்டு ரகசியமாக ''எனக்கு நம்மூர் கோவிலின் பக்கம் வசிக்

—பாபநாசம் சாமா—



கும் கோவிந்தசாமி என் நெடு நாளைய விரோதி. அவனை நான்கு தட்டு தட்டினால் உனக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறேன்'' என்றான். பயில்வானும் அவ்வாறே செய்வதாகக் கூறினான். சாராயக் கடைக்காரனும் வேம்பன் கொடுத்த ஒரு ரூபாயை எடுத்து பயில்வானிடம் கொடுத்தான்.

மலையனும் கோவிந்தசாமியின் வீட்டிற்குப் போய் அவனை அடித்து விட்டு அந்த பாவத்தைப் போக்கிக் கொள்ள அருகிலுள்ள கோவிலுக்குப் போய் பயபக்தியுடன் தன் பாவத்தை மன்னிக்கும்படி கடவுளிடம் வேண்டினான்

அப்போது கோவில் பூசாரி புரந்திரன் கற்பூர ஆரத்தி செய்து தட்டை எடுத்து வரவே மலையன் சாராயக் கடைக்காரன் கொடுத்த ஒரு ரூபாயை அதில் போட்டுத் தன் பாவம் போய்விட்டதாகத் திருப்தி அடைந்து அங்கிருந்து சென்றான்.

தட்டில் ஒரு ரூபாய் விழுந்தது கண்டு பூசாரி மகிழ்ச்சி அடைந்தான். அவன் அதை எடுத்துக் கொண்டு தான் மிகவும் விரும்பும் நடனமாது பார்வதியின் வீட்டிற்குச் சென்றான். அவன் அவளது இசையைப் பாராட்டி ஒரு ரூபாயைக் கொடுக்கவே அவளும் அதை வாங்கிக் கொண்டாள்.

அவள் அந்த ரூபாயை எங்கோ கொண்டு போய் வைத்தாள்.

அந்த ரூபாயை அந்த வீட்டு வேலைக்காரி வேலாயி திருடி விட்டாள். அதற்குமுன் அவள் எதையும் திருடியதே இல்லை. அதைக் கொண்டு நல்ல ரவிக்கைத் துணி வாங்கிக் கொள்ள நினைத்து பார்வதி வழக்கமாகப் புடவைகள் வாங்கும் துணி கடைக்குப் போனாள்.

கடைக்காரன் வேலாயியைக் கண்டதும் ''என்ன வேலாயி! பார்வதி அம்மா புடவைகள் கொண்டு வரச் சொன்னார்களா?'' என்று கேட்டான். வேலாயியும் ''இல்லை. எனக்குத்தான் ஒரு ரவிக்கை துணி வேண்டும்'' என்று கூறவே கடைக்காரன் உடனே பார்வதியின் வீட்

டிற்கு ஒரு ஆளை அனுப்பி விசாரிக்க வேலாயியின் திருட்டு வெளிப்பட்டது. வழக்கும் நீதிபதியிடம் போயிற்று.

அன்று மாலை நீதிபதி பார்வதியைக் கூப்பிட்டு "ஒரு ரூபாய் திருட்டிற்காக வேலாயியைக் கடுமையாக தண்டிப்பது சரியல்ல. அவளை நீ வேலையிலிருந்து நீக்கி விட்டால் அதுவே அவளுக்கு தண்டனை போலாகும்" என்றார்.

பார்வதியும் "அந்த ஒரு ரூபாய் எனக்கு மிகவும் மதிப்பானது. ஏனெனில் கோவில் பூசாரி புரந்திரர் என் இசையைப் பாராட்டிக் கொடுத்த அன்பளிப்பு அது" என்றாள். அதுகேட்டு நீதிபதி "ஆ! அந்தக் கிழவர் புரந்திரருக்கா திடீரென்று நடனமாது மீது ஆசை ஏற்பட்டது! அவரா அதைக் கொடுத்தார்? அவருக்கு எப்படி இது கிடைத்தது?" எனக்கூறி பூசாரியை அழைத்து வரச் சொன்னார்.

பூசாரி வந்ததும் நீதிபதி அவருக்கு அந்த ரூபாய் எங்கிருந்து கிடைத்தது என்று கேட்கவே அவரும் பயில்வான் தட்டில் அதைப் போட்டதாகக் கூறினார். பயில்வானை விசாரிக்க அவன் அது தனக்கு சாராயக் கடைக்காரன் கொடுத்ததாகக் கூற, சாராயக் கடைக்காரனை நீதிபதி அழைத்து விசாரிக்க அதைப் பாம்பாட்டி வேம்பன் தன்னிடம் கொடுத்ததாகக் கூறினான். பாம்பாட்டியை வரவழைத்து கேட்டபோது அவன்



அது தனக்கு புதரிலிருந்து கிடைத்த தாகக் கூறினான்.

அச்சமயத்தில் கோணியப்பன் என்ற விவசாயி தன் ஒரு ரூபாய் காணவில்லை என்று புகார் கொடுக்க வந்தான். தன் ஒரு ரூபாய் காணவில்லை என்று புகார் செய்ய பாப்பைய்யனும் வந்தான்.

அப்போது நீதிபதி "இப்போது என்னிடம் ஒரு ரூபாய்தான் கிடைத் துள்ளது. இது கண்டிப்பாக கோணி யப்பனுடையது அல்ல. பாப்பைய் யனுடையதுதான்" என்று கூறி அந்த ரூபாயைப் பாப்பைய்யனி டம் கொடுத்தார்.

அப்போது கோணியப்பன் நீதி பதியிடம் "ஐயா! அது என் ரூபா யல்ல, பாப்பைய்யனுடையதுதான் என்று எப்படித் தீர்மானித்தீர் கள்?" என்று கேட்டான்.

நீதிபதியும் "இந்தப் பாப்பைய் யனைப் பற்றி இந்த ஊர் அறி யுமே. அவன் தன் காசை முதலைப் பிடியாகப் பிடித்து வைத்திருப்ப வன். அவனிடமிருந்து விடுதலை பெற்ற ரூபாய் வெகுசீக்கிரம் கைக் குக் கை மாறிக் கொண்டே போயி ருக்கிறது. அந்த ரூபாயை அடைந்த வன் எல்லாம் ஏதோ ஒரு கெட்ட செயலைச் செய்திருக்கிறான். அத னால் அது பாப்பைய்யனுடைய தாகத்தான் இருக்க வேண்டும். இதில் சந்தேகமே இல்லை" என் றார்.

அப்போது அங்கு கூடி இருந்த வர்கள் எல்லாம் நீதிபதியின் தீர்ப் பைக் கேட்டுப் பாப்பைய்யனைப் பார்த்தவாறே சிரித்தார்கள். பாப் பைய்யனுக்கு அந்தத் தீர்ப்பு நல்ல தொரு பாடத்தையே புகட்டியது. அவன் உடனேயே அந்த ரூபாயை கோணியப்பனிடம் கொடுத்து விட்டான். அதுமட்டுமல்ல அன்று முதல் தன் கஞ்சத்தனத்தை விட்டு விட்டு தன் பணத்தை நல்லவழி யில் தாராளமாகச் செலவு செய் தும் பிறருக்குக் கொடுத்து உதவி யும் வரலானான்.





# வைத்தியர் ஆனவிதம்!

மணலூர் என்ற கிராமத்தில் மாதவ சாஸ்திரி என்ற புரோகிதர் இருந்தார். அவர் தாய் தந்தைய ரற்ற தன் மருமகனான பாலனைத் தன் வீட்டில் வைத்துக் கொண்டு வளர்த்து வந்தார்.

பாலனோ அதிகம் படிக்க வில்லை. தாய் தந்தையர் இல்லாத அவனை மாதவ சாஸ்திரி தன் வீட்டில் இருக்க வைத்து வளர்த்து வந்ததற்கு காரணம் இருக்கத்தான் இருந்தது. சாஸ்திரிக்கு ஒரு மகள் இருந்தாள். அவளைப் பாலனுக்கு விவாகம் செய்து வைத்துவிட்டால் தன் மகளின் விவாகப் பிரச்சினை யும் தீர்ந்துவிடும். மாப்பிள்ளைக் காக எங்கும் தேடி அலைய வேண் டியதும் இல்லை. பணமும் அதிக மாகச் செலவும் செய்ய வேண்டி வராது. இதுதான் மாதவ சாஸ் திரி எடுத்த முடிவு.

ஒருநாள் அவர் தன் வீட்டில் கட்டிப் போடப்பட்டிருந்த பழைய புத்தகங்களை எடுத்துப் பார்த்த போது அதில் 'ஆயுர்வேத கை முறை வைத்தியம்' என்ற நூல் அகப்பட்டது. அதில் எளிதில் கிடைக்கும் மூலிகைகள், வேர்கள், பட்டைகள் ஆகியவற்றைக் கொண்டு சாதாரணமாக ஏற்படும் நோய் களை எப்படி குணப்படுத்துவது என்று விவரிக்கப்பட்டிருந்தது.

மாதவ சாஸ்திரிக்கு ஒரு யோசனை தோன்றியது. அவர் தன் மருமகன் வைத்திய சாஸ்திரம் கற்றவன் எனக்கூறி அந்த நூலின் உதவியால் வைத்தியம் செய்ய வைத்து அவனைப் பணம் சம்பா திக்க வைப்பது என்று தீர்மானித் தார்.

மறுநாள் முதல் மாதவ சாஸ் திரியும் அவர் மனைவியும் தம்

—வி. லாவண்யா—



மருமகன் ஒரு வைத்தியன் என்றும் நோய்களை நொடியில் போக்கி விடுவான் என்றும் ஊராரிடம் சொல்லலானார்கள். ஊராரோ அவ்வூரில் வம்ச பரம்பரையாக வைத்தியத் தொழில் செய்து வரும் நாராயணனிடம் சென்றனர். தலைவலி, வயிற்று வலி, சுளுக்கு போன்ற சாதாரண நோய்களால் பீடிக்கப்பட்டவர்களே பாலனிடம் வந்தனர்.

பாலனும் தன்னிடம் வந்த நோயாளிகளின் நோய்களைப் பற்றிய விவரம் தெரிந்துகொண்டு தன் மாமா மாதவ சாஸ்திரியிடம் கூறுவான். அவர் உடனே ஆயுர் வேத கைமுறை வைத்திய நூலைப் பார்த்துவிட்டு இன்ன மருந்து கொடு என்பார். அதன்படி பால னும் மருந்து தயாரித்துக் கொடுத்து விடுவான்.

ஒருநாள் மாதவ சாஸ்திரியும் பாலனும் வெளியூரில் நடந்த ஒரு கல்யாணத்திற்குப் போய்விட்டுத் தம் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். அப்போது அவர் ஊர் மணியகாரரின் ஆள் ஓடி வந்து "உங்களைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன். மணியகாரர் பேச்சு மூச்சு இல்லாமல் படுத்துக் கிடக்கிறார். ஊரில் நாராயண வைத் தியரும் இல்லை. அதனால் பாலன் வந்து அவரது உடல் நிலையை பரி சோதித்து மருந்து கொடுக்க வேண் டும். இது அவரது குடும்பத்தவரும் வேண்டுவது" என்றான்.

மாதவ சாஸ்திரியும் அவனிடம் பேச்சுக் கொடுத்து மணியகார ரால் எதுவும் சாப்பிட முடிய வில்லை என்று தெரிந்து கொண் டார். அதற்குக் காரணம் அவர் அழுகிப் போன மாம்பழத்தையும், இளநீரையும் தேங்காய் வழுக்கை யையும், தேனையும் சாப்பிட்டது. வாய்க்கு ருசியாக உள்ளது என்று பல திண்பண்டங்களை வேறு சாப் பிட்டு விட்டதால் வயிறு மந்தித் துப் பசியே இல்லாது போயிற்று.

பாலனும் மாதவ சாஸ்திரியும் மணியகாரரின் வீட்டிற்குச் சென் றார்கள். பாலன் அவரது நாடியை

பிடித்துப் பார்த்து விட்டு வீட்டிற்குப் போய் மருந்து அனுப்புவதாகக் கூறி மாதவ சாஸ்திரியுடன் சென்றான். மாதவ சாஸ்திரி தன்னிடமிருந்த வைத்திய சாஸ்திரப் புத்தகத்தில் அஜீர்ணத்திற்கு என்ன மருந்து கூறப்பட்டிருக்கிறது. என்று பார்த்தார். பிறகு அதன் படி மருந்து தயாரித்து பாலன் சாஸ்திரியிடம் கொடுத்தான்.

மாதவ சாஸ்திரி அந்த மருந்தை எடுத்துக் கொண்டு மணியகாரரின் வீட்டை அடைந்தபோது அபசகுனம் அண்ணாசாமி "ஓகோ புரோகிதர் மருந்து கொண்டு வந்திருக்கிறாரா? அதுவும் ஒருவிதத்தில் நல்லதே. வைத்தியர் கொடுத்த மருந்தால் மணியகாரரர் குணமடைந்தாலும் இவருக்குப் பணம் கிடைக்கும். ஒருவேளை குணமடையாமல் மேல் லோகத்திற்கு அவர் போய்விட்டால் இந்த சாஸ்திரி ஈமச் சடங்குகளைச் செய்ய உதவியாக இருப்பார். அப்போதும் இவருக்குப் பணம் கிடைக்கும்" என்று கூறிச் சிரித்தான்.

அதுகேட்டு மாதவ சாஸ்திரியும் அப்போது வந்த பாலனும் அண்ணாசாமியைச் சுட்டு எரித்து விடுவது போலப் பார்த்தார்கள். பிறகு தாம் கொண்டு வந்த மருந்தை அவர்கள் மணியகாரருக்குக் கொடுத்து சாப்பிட வைத்தார்கள். அவர்களது அதிர்ஷ்டம் அரை மணி நேரத்தில் மணியகாரர் எழுந்து உட்கார்ந்தார். அதற்



குச் சற்று நேரத்திற்குப் பிறகு அவருக்கு நல்ல பசி எடுத்தது.

இதற்குப் பிறகு பாலன் மிகத் திறமை வாய்ந்த வைத்தியன் என்று பெயர் பெற்று விட்டான். இந்த விஷயம் அரசாங்க வைத்தியர் அனந்ததாசர் காதில் விழுந்தது. எவ்விதப் பயிற்சியும் இல்லாமல் ஒருவன் வைத்தியம் செய்கிறான் என்றால் அதில் ஏதோ ரகசியம் இருக்கிறது என நினைத்தார்.

அவர் நன்கு விசாரித்ததில் மாதவ சாஸ்திரிக்குக் கிடைத்த புத்தகம் பற்றியும் அதைக் கொண்டு பாலனும் மாதவ சாஸ்திரியும் வைத்தியம் செய்து வந்ததும் தெரிந்தது. அவர் பாலனை அழைத்து "நீ சரியான பயிற்சி இல்லாமல் இப்படி வைத்தியம் செய்வது தவறு. மற்றவர்களின் உயிருக்கு ஆபத்து. அதனால் நீ இனிமேல் வைத்தியம் செய்வதானால் முதலில் வைத்திய சாஸ்திரத்தை நன்கு கற்றும் பயிற்சி பெற்றும் உன்னைத் தகுதி பெற்றவனாக ஆக்கிக்கொள். நீ விரும்பினால் என் சீடனாகிப் பயிற்சியும் பெறலாம்" என்றார்.

பாலனும் "ஐயா! தாங்கள் கூறியபடியே செய்கிறேன். இது வரை நான் எப்படியோ வைத்தியம் செய்துவிட்டேன். நல்லவேளையாக என் மருந்தால் யாரும் இறக்கவில்லை. நான் தங்களது சீடனாகி நல்ல பயிற்சி பெற்ற பிறகே இனி வைத்தியத் தொழிலை ஆரம்பிப்பேன்" என்றான்.

பாலன் நான்கைந்து ஆண்டுகள் அனந்ததாசரின் சீடனாக இருந்து வைத்திய சாஸ்திரம் கற்றான். நல்ல பயிற்சியும் பெற்றான். அதற்குப்பின் அவன் மணலூருக்கு வந்து வைத்தியத் தொழிலை ஆரம்பித்தான். அவனுக்கு சிறந்த வைத்தியன் என்ற பெயர் அந்த வட்டாரத்தில் ஏற்பட்டு விட்டது. அவன் தன் மாமன் மகளை மணந்து கொண்டு வைத்தியத் தொழிலை நன்கு நடத்தி எல்லோருக்கும் உதவி வரலானான்.






இராமருக்கும் இராவணனுக்கும் நடந்த பயங்கரப் போரைப் பார்த்து விட்டு தேவர்களும், யட்சர்களும், கின்னரர்களும், கந்தர்வர்களும் இராமரின் வீரச் செயல்களைப் புகழ்ந்தவாறே தத்தம் இடங்களுக் குச் சென்றனர். இந்திரனின் தேரோட்டி மாதலியும் இராமரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு இந்திரனின் ரதத்துடன் திரும்பிச் சென்றான்.

இதற்குப்பின் இராமர் இலட்சு மணனுடனும் சுக்கிரீவனுடனும் தம் முகாமிற்கு வந்தார். அப் போது அவர் "இனி நாம் விபீ ஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டும்" என்று அவர் களிடம் கூறினார்.

இலட்சுமணன் வானரர்களிடம் பொற்குடம் கொடுத்து சமுத்திர ஜலத்தைக் கொண்டு வரச் சொன் னான். பிறகு அவனே விபீஷணனை அழைத்து வந்து சிம்மாசனத்தில் அமரச் செய்தான். கடல் நீரால் அபிஷேகம் செய்தான். விபீஷண னின் அமைச்சர்களும், அவனது நலனைக் கோரிய ராட்சஸர்களும் மகிழ்ச்சியால் வெற்றி கோஷங் களை எழுப்பினார்கள். விபீஷண னும் இனி நல்லாட்சி மலரும் என வாக்குறுதி அளித்தான்.

இராட்சஸ வீரர்கள் விபீஷண னுக்குப் பல விலையுயர்ந்த காணிக்கைகளைச் சமர்ப்பித்தார்

—விபீஷண பட்டாபிஷேகம்—



கள். விபீஷணனும் இராமருக்கும் இலட்சுமணனுக்கும் நன்றி செலுத்தும் வகையில் பல விலையுயர்ந்த பொருள்களைக் காணிக்கையாகச் செலுத்தினான். இராமருக்கு அவற்றையெல்லாம் ஏற்க மனம் இல்லாது போயினும் சுக்கிரீவன் மனம் மகிழட்டும் என்பதற்காக ஏற்றுக் கொண்டார்.

அப்போது இராமர் தம்மருகே பயபக்தியுடன் கைகட்டிக் கொண்டு நின்று கொண்டிருந்த அனுமாரிடம் "அனுமானே! நீர் இலங்கை மன்னனான விபீஷணனின் அனுமதி பெற்று இலங்காபுரிக்குள் சீதை இருக்கும் இடத்திற்குப் போய் அவளிடம் இராவணனை வென்ற செய்தியைக் கூறவும். அவளைப் பற்றிய விவரங்களை எல்லாம் தெரிந்து கொண்டு வருவீர்" எனக் கூறினார்.

அனுமாரும் கிளம்பி இலங்காபுரிக்குச் செல்லவே வழி நெடுக நின்றவர்கள் அனுமாரை மரியாதையுடன் வணங்கினார்கள். அவர் சீதை இருக்கும் இடத்திற்கும் போய்ச் சேர்ந்தபோது அங்கு சீதை ஒரு மரத்தின் கீழ் கவலையுடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவளைச் சுற்றிலும் ராட்சஸப் பெண்கள் அமர்ந்திருந்தனர்.

அனுமார் அவள் முன் சென்று பணிவுடன் வணங்கி "நான்தான் அனுமன் வந்திருக்கிறேன்" என்றார். சீதையும் தலை நிமிர்ந்து பார்த்து அவரை அடையாளம் கண்டு கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

அப்போது அனுமார் "தேவியாரே! இராமர் நலமாகவே இருக்கிறார். அவர் விபீஷணன், சுக்கிரீவன் முதலியவர்களோடு வானரப் படைகள் சூழ்ந்திருக்க இருக்கிறார். அவர் தம் எதிரியை அழித்து தம் நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டதைத் தங்களிடம் சொல்லச் சொன்னார். இராமர் இராவணனை வெல்ல விபீஷணனின் உதவியும், வானர வீரர்களின் பலமும் இலட்சுமணனின் உறுதியும் துணை புரிந்தன. அவர்

தங்களது நலம் அறிய ஆவலுடன் இருக்கிறார். அவர் இந்த நற்செய்தியைத் தங்களுக்கு அறிவிக்கச் சொல்லி தாங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவீர்கள் என்றே நம்புகிறார். மகாப் பதிவிரதையான தாங்கள் இன்னமும் உயிருடன் இருப்பதைத் தம் பாக்கியமாக அவர் கருதுகிறார். மேலும் அவர் வெற்றிபெற்று விட்டதால் இனி தாங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டியதும் இல்லை என்பதனையும் தங்களிடம் சொல்லச் சொன்னார். இராவணன் ஒழிந்தான். இலங்கை இராமரின் வசமாகி விட்டது. விபீஷணனை அவர் இலங்கையின் மன்னனாக ஆக்கி விட்டார். எனவே இங்கே இப்போது தாங்கள் இருப்பதற்குக் கூட பயப்பட வேண்டியதில்லை. தங்களைக் காண விரைவில் விபீஷணனும் வருவார்'' என்று கூறினார்.

சீதை அனுமார் கூறியதைக் கேட்டு மகிழ்ந்து எழுந்து நின்றாள். ஆனால் எதுவும் கூறாமல் ஏதோ யோசித்தவாறே இருக்கலானாள். அதுகண்டு அவர் "என்ன யோசிக்கிறீர்கள்? நான் சொன்னதற்கு என்ன பதில் சொல்லலாம் என்றா? தங்கள் மௌனத்தைக் கலையுங்கள்'' என்றார்.

சீதையும் தழுதழுத்த குரலில் "என் கணவர் வெற்றி பெற்றார் என நீங்கள் கூறக் கேட்டதும் மகிழ்ச்



சிப் பெருக்கால் வாயடைத்துப் போய் விட்டேன். இப்படிப்பட்ட இனிய செய்தியைக் கூறிய தங்களுக்கு நன்றி கூற வார்த்தைகளைத் தேடியும் கிடைக்கவில்லை. தங்களுக்குப் பரிசளிக்கத் தக்க பொருள் கூட மூவுலகிலும் இல்லையே'' எனக் கூறினாள்.

அனுமார் அவளை வணங்கி "இந்த மாதிரி வேறு யாராலும் கூறமுடியாது. உங்கள் கணவர் வெற்றிபெற வேண்டும் என்று நீங்கள் மனதார நினைத்தீர்கள். அது அப்படியே நிறைவேறிவிட்டது. நீங்கள் கூறிய சொற்களே எனக்குச் சிறந்த பரிசாகும். இராவணனைக் கொன்ற இராமரைப் பார்த்



துக் கொண்டிருந்தாலே போதும். எனக்கு அதுவே திருப்தி அளிக்கிறது. வேறு பரிசோ பதவியோ நான் விரும்ப மாட்டேன்" என்றார்.

சீதையும் அனுமாரைப் புகழ்ந்தவாறே பலவாறாகக் கூறினாள். அனுமாரும் "நீங்கள் மட்டும் 'உம்' என்று ஒரு வார்த்தை கூறுங்கள். உங்களை துன்புறுத்திய இந்த ராட்சஸப் பெண்களை நொடியில் கொன்று விடுகிறேன்" என்றார்.

சீதையோ அனுமாரிடம் சாந்தமாக "இந்த ராட்சஸப் பெண்கள் யாவரும் இராவணனின் பணியாட்கள். இவர்கள் அவனிடமிருந்து தம் பணிக்காக ஊதியம் பெறுபவர்கள். எனவே இவர்கள் தம் எஜமானனின் கட்டளைப்படி நடந்ததில் தவறு எதுவும் இல்லை. இவர்கள் அவனது கட்டளைப்படி நடக்கா விட்டால் தண்டிக்கப்படுவார்கள். எனவே இவர்கள் மீது கோபமோ ஆத்திரமோ கொள்வது சரியல்ல. என் கிரக பலன் சரியாக இல்லை. நான் முன் பிறப்பில் பாவங்களை நிறையச் செய்திருக்கிறேன் போலிருக்கிறது. அவற்றின் பலன்களை இந்தப் பிறப்பில் அனுபவிக்கிறேன். எனவே நான் இவர்கள் மீது சற்றும் கோபம் கொள்ளவில்லை. இராவணன் இறந்து விட்டதால் இவர்கள் இனிமேல் என்னை ஒன்றும் செய்யமாட்டார்கள். எனவே இவர்களை ஒன்றும் செய்யக் கூடாது" என்றாள்.

அனுமார் சீதை கூறியதைக் கேட்டுப் பலவிதமாய் அவளைப் பாராட்டி "நீங்கள் எல்லா விதத்திலும் இராமருக்கு ஏற்ற மனைவி தான். நான் அவரிடம் என்ன சொல்ல வேண்டும் என்பதைக் கூறுங்கள். அதை அவரிடம் தெரிவிக்கிறேன்" என்றார்.

அப்போது சீதை "எனக்கு இருக்கும் ஒரே ஆசை என் கணவரைப் பார்க்க வேண்டும் என்பதுதான்" என்றாள். அதை இராமரிடம் கூறுவதாகச் சொல்லி விட்டு அனுமார் அங்கிருந்து கிளம்பி இராமர் இருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தார்.

அவர் இராமரிடம் "நான் சீதா தேவியைக் கண்டேன். அவரும் என்னை அடையாளம் கண்டு கொண்டார். நமக்குக் கிடைத்த வெற்றியைக் கூறினேன். அவர் மகிழ்ந்து போனார். இராவணனைக் கொன்ற தங்களையும் இலட்சுமணனையும் காண ஆவல் கொண்டிருப்பதாக அவர் கூறினார்" என்றார்.

இதைக்கேட்ட இராமரின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. சற்று நேரம் வரை அவர் எதுவும் கூறாமல் இருந்தார். பிறகு அவர் "இவ்வளவு நாட்களாக சீதை இராவணனிடம் சிறைப்பட்டுக் கிடந்தவள். அவளை நான் மீண்டும் அப்படியே ஏற்றுக் கொண்டால் உலகம் என்ன கூறும்? அவள் மாசு மருவற்றவள் என்பதை மற்றவர்களுக்கு நிரூபிக்க வேண்டாமா? சீதை ஒரு பாவமும் அறியாதவள். குற்றமற்றவள் என்பது எனக்குத் தெரியும். அவளை நான் ஏற்க மறுத்தால் பெரும்பாவம் என்னைச் சாரும். அதனால்தான் என்ன செய்வது என்று தெரியாமல் விழிக்கிறேன்" என்றார்.

அவர் பெருமூச்சு விட்டவாறே விபீஷணனிடம் "நீ போய் வாசனை திரவியங்கள் கலந்த நீரால் சீதையைக் குளிக்க வைத்து நன்கு அலங்கரித்து கொண்டு இங்கே வரச் சொல்" என்றார்.



விபீஷணனும் உடனே இலங்கா புரிக்குள் சென்று தன் அந்தப்புர பெண்களை அனுப்பி இராமரின் விருப்பத்தை அவளுக்குத் தெரிவித்தான். முதலில் சற்றுத் தயங்கிய சீதை பிறகு இராமரின் விருப்பப்படி ஸ்நானம் செய்து நல்ல ஆடைகளை உடுத்தி ஆபரணங்களை அணிந்து கொண்டு பல்லக்கில் ஏறி அமர்ந்தாள். விபீஷணன் பல ராட்சஸ வீரர்களை அப்பல்லக்கின் பின்னால் அனுப்பி சீதையை இராமர் இருக்கும் இடத்திற்குக் கொண்டு போகச் சொன்னான்.

சீதை இராமர் இருக்குமிடத்தை அடைந்தபோது அவர் கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்



மணனும் சுக்கிரீவனும் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என நினைத்து பயப்பட்டார்கள்.

சீதை வெட்கப்பட்டவாறே விபீஷணன் வழிகாட்ட இராமர் முன்வந்து நின்றாள். இராமரைக் கண்டதும் அவளது கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது. அவள் எதுவும் பேச முடியாத நிலையில் நின்றாள்.

அப்போது இராமர் சீதையிடம் "சீதையே! போரில் இராவணனைக் கொன்று உன்னை விடுவித்து விட்டேன். எனவே நான் செய்த சபதம் நிறைவேறி விட்டது. இராவணன் உன்னைக் கவர்ந்து சென்றதால் எனக்கு அவமானம் ஏற்பட்டது. அதனைப் போக்க சுக்கிரீவன் உதவியோடு கடலைக் கடந்தேன். விபீஷணனின் உதவியும் பெற்றேன். இவர்களின் சேர்க்கையால் என்னால் எளிதில் இராவணனைப் போரில் கொல்ல முடிந்தது" என்றார்.

அதுகேட்டு சீதை தன்னைப் பற்றி ஒரு வார்த்தை கூட இராமர் கூறாதது கண்டு மிகவும் வருந்தினாள். அப்போது இராமர் "சீதையே! பெருத்த அவமானத்திற்குள்ளான நான் அதனைப் போக்க வேண்டி இராவணனைப் போரில் கொன்று உன்னை மீட்டேன். இப்படிச் செய்தது உனக்காக அல்ல. என் பெயருக்கு ஏற்

திருந்தார். அவர் மனதில் நீண்ட நாட்களுக்குப் பின் சீதையைக் காணப் போகும் மகிழ்ச்சி ஒருபுறமும், அவளை புறக்கணிப்பதா அல்லது ஏற்பதா என்ற பிரச்னை மற்றொரு புறமும் எழுந்தது. அவர் சீதையை தன்முன் அழைத்து வரும்படி விபீஷணனிடம் கூறினார்.

விபீஷணனும் அங்கிருந்த யாவரையும் அப்பால் போகும் படிக் கூறினான். அதுகண்டு இராமர் அவர்களை எல்லாம் அங்கேயே இருக்கும்படிச் சொல்லி "இவர்கள் அன்னியர்கள் அல்லவே. இவர்களும் சீதையைப் பார்க்கட்டும். இவர்களை விரட்ட வேண்டாம்" என்று கூறினார். இலட்சு

பட்ட கறையைப் போக்கிக் கொள்ளவே என்பதைத் தெரிந்துகொள். உன்னை விடுவித்துவிட்டேன். இனி இஷ்டப்பட்ட இடத்திற்குச் செல்லலாம். வெகுகாலம் நீ வேறொரு ஆடவனிடம் சிறைப்பட்டுக் கிடந்தாய். எனவே உன்னை இப்போது நான் எப்படி ஏற்க முடியும்? உன்னை இராவணன் தன் கண் கொண்டு பார்த்து மகிழ்ந்தான். மனதில் எண்ணி மகிழ்ந்தான். எனவே உன்னை நான் ஏற்க முடியுமா? நான் உன்னை குறை கூற வில்லை. அதனால்தான் உன்னை எங்கு வேண்டுமானாலும் போகலாம் என்று கூறினேன். நீ இலட்சுமணன், பரதன், சுக்கிரீவன், விபீஷணன் ஆகியோரின் இல்லங்களில் ஏதாவது ஒன்றில் இருக்கலாம். நீ எங்கு சுகமாக இருக்கமுடியும் என நினைக்கிறாயோ அங்குபோய் இருக்கலாம். நான் செய்த சபதப்படி இராவணனைக் கொன்று உன்னைச் சிறை மீட்டி விட்டேன். உன்னை நான் இப்போது ஏற்பது என்பது மட்டும் என்னால் இயலாது'' என்றார்.

இராமர் இப்படிச் சற்றும் இரக்கம் இல்லாமல் கடும் சொற்களைக் கூறுவார் என அங்கு கூடி இருந்தவர்கள் யாவரும் எதிர்பார்க்கவில்லை. நீண்டகாலமாக சீதையைப் பிரிந்து மனம் வாடிய இராமர் அவளை விடுவித்ததும் உடனேயே ஏற்றுக் கொண்டு விடுவார் என்றே எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர் சீதையை ஏற்க முடியாது எனக் கூறியது ஒரு பெருத்த இடி விழுந்ததைப் போல அவர்கள் உணர்ந்தார்கள். இலட்சுமணனும், சுக்கிரீவனும், அனுமாரும் இதென்ன விபரீதம் எனப் பொருள்படும் வகையில் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

அதைக் கேட்டு சீதையால் துக்கத்தை அடக்க முடியவில்லை. அவளது கண்களிலிருந்து கண்ணீர் வடியலாயிற்று.



# நுழைவுக் கட்டணம் இல்லை!

**பொ**ன்னையா ஒரு நாடகக் குழுவை நடத்தி வந்தான். அவனது நாடகங்களைப் பார்க்கக் கூட்டம் வரவில்லை. பணக்கஷ்டத்தில் அகப்பட்ட அவன் தன் நண்பன் மெய்யப்பனிடம் பணம் வாங்கினான்.

மெய்யப்பன் தன் பணத்தை வசூலிக்க ஒரு யுக்தி செய்தான். அவன் ஊர் முழுவதிலும் "இன்று பொன்னையா போடும் 'சத்தியவான் சாவித்திரி' நாடகத்திற்கு நுழைவுக் கட்டணம் இல்லை" என்ற செய்தியைப் பரப்பினான்.

நாடகத்தைப் பார்க்க பெரும் கூட்டம் கூடியது. நாடகம் முடிந்ததும் எல்லோரும் வெளியேற முற்பட்டபோது மெய்யப்பனின் ஆட்கள் கொட்டகையின் ஒவ்வொரு வாசலிலும் நின்று வெளியேறும் ஒவ்வொருவரிடமும் ஒரு ரூபாய் கொடுத்தாலே வெளியேறலாம் என்றனர்.

அது கேட்டு எல்லோரும் "இதென்ன! 'நுழைவுக் கட்டணம் கிடையாது' என்று அறிவித்தீர்களே. அது பொய்யா?" என்று கேட்டார்கள். மெய்யப்பனின் ஆட்களும் "பொய் இல்லைதான். நுழைவுக்கட்டணம்தான் இல்லை என்றோம். ஆனால் வெளியேறக் கட்டணம் இல்லை என்று கூறவில்லையே" என்றனர்.

நாடகம் பார்த்துத் திரும்பியவர்கள் மறுபேச்சுப் பேசாமல் ஆளுக்கு ஒரு ரூபாய் வீதம் கொடுத்து விட்டுச் சென்றனர்.







# மர்ம ஓவியம்

வெகுநாட்களுக்கு முன் ராஜஸ்தானத்தில் விஜயசிம்மன் என்ற மன்னன் இருந்தான். அவனது தர்பாரில் இருந்த பிரபல ஓவியர் திடீரென இறந்து போனார். அப்போது முதல் அவரது இடம் நிரப்பப்படாமல் இருந்தது. தர்பாரில் அவர் அமர்ந்த ஆசனம் காலியாக விடப்பட்டிருந்தது.

இப்படி இருக்கையில் இமய மலை பகுதியிலிருந்து இந்துமுகன் என்ற ஏழை ஓவியன் ஒருவன் ராஜஸ்தானத்திற்கு வந்தான். அவன் மன்னனைக் கண்டு "நான் வெகு தூரத்திலிருந்து தங்களைக் காண வந்திருக்கிறேன். நான் ஒரு ஓவியன். இவை நான் வரைந்த ஓவியங்கள். இவற்றைக் கண்டாலே என் திறமை தங்களுக்குத் தெரிந்துவிடும்" எனக் கூறி ஒரு கட்டு ஓவியங்களை மன்னன் முன் வைத்தான்.

மன்னனும் அவற்றைப் பார்த்து பிரமித்துப் போனான். அவ்வளவு திறமைமிக்க ஓவியன் தொலை தூரத்திலிருந்து தன்னைத் தேடி வந்தது தன் அதிர்ஷ்டமே என அவன் எண்ணினான். அவன் அந்த ஓவியனிடம்" உன் ஓவியங்கள் மிகவும் நேர்த்தியாக உள்ளன. இவற்றிற்கு நீ என்ன விலை சொல்கிறாய்?" என்று கேட்டான்.

இந்துமுகனும் "நான் பசித்திருப்பவன். வயிறு வளர்க்க வேலை தேடி வந்தவன். எனவே என் பசியைப் போக்கிக் கொள்ள தங்கள் ஆஸ்தானத்து ஓவியனாகப் பணி புரிய அனுமதிக்க வேண்டும்" என்று வேண்டினான்.

மன்னன் முதலில் அவனுக்கு நல்ல உணவளித்து பிறகு தன் ஆஸ்தான ஓவியர் பதவியையும் அவனுக்கு அளித்தான். இந்துமுகனும்

—ராஜஸ்தான பழங்கதை—

தர்பாரில் மறுநாள் முதல் ஓவிய னின் ஆசனத்தில் அமரலானான்.

ஓவியனை நியமித்து விட்ட தால் விஜயசிம்மன் அவனைக் கொண்டு தன் உருவப் படத்தை வரைய வைக்கலாம் என்று எண்ணினான். அவன் இந்துமுக னிடம் "என் முன்னோர்களின் உருவப் படங்கள் எல்லாம் அரண் மனைக் கூடத்தில் மாட்டப்பட்டு உள்ளன. என் உருவப்படத்தை யும் நீ வரைந்து கொடு. அதையும் அவற்றோடு மாட்டி வைக்கிறேன். பிற்கால சந்ததியினர் அதனைக் கண்டு மகிழ்வார்கள்" என்றான்.

இந்துமுகனும் "தங்கள் ஒருவ ரது திருஉருவப் படம் மட்டு மல்ல, தங்கள் பட்டத்து ராணி யார், அமைச்சர்கள், கவிஞர் கள், படைத் தலைவர்கள் என்று எல்லோருடைய உருவங்களையும் வரைந்து விடுகிறேன். எனக்கு ஓவியம் தீட்ட ஒரு தனி சுவரை ஒதுக்குங்கள்" என்றான்.

மன்னன் மகிழ்ந்து போய் இந்து முகன் வேண்டியபடியே தன் கலைக் கூடத்தில் ஒரு சுவரை ஓவியம் தீட்ட ஒதுக்கிக் கொடுத்தான். தர் பாரில் உள்ளவர்களை எல்லாம் ஆஸ்தான ஓவியர் ஓவியமாகத் தீட்டப் போகிறார் என்று கேள் விப்பட்டதும் இந்துமுகனைக் காண தினமும் பலர் வரலாயினர்.

அவர்களில் ஒருவன் ஒரு கண்



பார்வை இழந்தவன். இன்னொரு வன் ஒரு காலை இழந்தவன். வேறொருவன் ஒரு கை இல்லா தவன். இப்படிப்பட்டவர்கள் எல் லாம் ஓவியனைத் தனித்தனியே கண்டு "இதோ பார்! நீ வரையும் ஓவியத்தில் என் அங்கக் குறை பாடு தெரியக்கூடாது. அப்படித் தெரிந்தால் உன்னை உயிருடன் விட்டு வைக்க மாட்டேன்" என்று எச்சரித்தார்கள்.

இப்படி ஓவியனைப் பலர் மிரட்டினார்கள் என்ற விஷயம் மன்னனுக்குத் தெரிய வந்தது. அவன் இந்துமுகனை அழைத்து "நீ வரையும் ஓவியங்கள் எல்லாம் உள்ளது உள்ளபடியே இருப்பதாக



அமைய வேண்டும். யாரோ மிரட்டி னான் என்பதற்காக அவனது அங்கஹீனத்தை மறைத்துவிடக் கூடாது. தெரிந்ததா?" என்றான். இந்துமுகனும் மன்னன் விருப்பப் படியே செய்வதாகக் கூறினான்.

இப்போது அவன் நிலை இரு தலைக்கொள்ளி எறும்பு போல ஆயிற்று. ஒருபுறம் மன்னனின் மிரட்டல். மறுபுறம் அங்கஹீனர் களின் எச்சரிக்கை. இதிலிருந்து தப்ப என்ன வழி என்று யோசிக்க லானான். முடிவில் அவன் ஒரு தீர்மானத்திற்கு வந்தான்.

ஓவியன் தனக்கு ஒதுக்கப்பட்ட சுவரை ஒரு பெரிய திரையால் மறைத்தான். அவன் தனக்கு உதவ மூன்று பேர்களை நியமித்து அவர் களோடு சேர்ந்து குடித்துக் கும்மா ளம் போடலானான். இப்படியாக நாட்கள் கழியலாயின.

ஒரு மாதம் கழித்ததும் விஜய சேனன் ஓவியனை வரவழைத்து ஓவியங்கள் எந்த நிலையில் உள் ளன என்று கேட்டான். இந்துமுக னும் "அரசே! வேலை மும்முரமா கவே நடந்து கொண்டிருக்கிறது. விரைவிலேயே முடிந்துவிடும்" என்று பணிவுடன் கூறினான்.

சில நாட்களானதும் இந்து முகன் "ஓவிய வேலை முடிந்துவிட் டது. நாளை நல்ல நாள். நீங்கள் நாளை அதன் திறப்புவிழாவை நடத்தலாம்" என்றான். மன்னனும் அது கேட்டு மகிழ்ந்து மறுநாள் திறப்பு விழா என்பதை தர்பாரில் யாவருக்கும் அறிவித்தான்.

மறுநாள் மன்னன் ராணியுட னும், அமைச்சர்களுடனும் படைத் தலைவர்களுடனும் மற்ற பிரமுகர் களுடனும் இந்துமுகன் வரைந்த ஓவியங்களின் திறப்பு விழாவிற் காகக் கலைக் கூடத்திற்கு வந் தான். அங்கு சுவர் திரையால் மறைக்கப்பட்டிருந்தது.

அங்கு வந்தவர்களிடம் இந்து முகன் "உங்களை எல்லாம் பல வண்ணங்களில் ஓவியமாக வரைந் திருக்கிறேன். அவரவர் படங்களை அவரவர்கள் பார்க்கலாம். ஆனால் என் ஓவியம் மிக உயர்ந்த குடும்

பத்தில் பிறந்தவர் கண்களுக்கு மட்டுமே புலப்படும். மற்றவர்களுக்குத் தெரியாது'' என்று கூறித் திரையை விலக்கினான்.

சுவரில் எந்தப் படமும் இருக்கவில்லை. ஆனால் இதை எப்படிக் கூறுவது என்று ஒவ்வொருவனும் தவித்தான். ஓவியம் தனக்குத் தெரியவில்லை என்று கூறினால் தான் உயர் குடும்பத்தில் பிறந்தவன் அல்ல என்றாகி விடுமே! இதனால் யாரும் எதுவும் பேசாமல் இருந்தனர்.

அப்போது அரசாங்க விதூஷகன் ''என்ன இது? சுவரில் ஒரு ஓவியமும் இல்லையே. வெறும் சுவர்தானே தெரிகிறது!'' என்று உரக்கக் கூறினான். அப்போது மற்றவர்களும் ''ஆமாம். விதூஷகன் சொல்வது சரியே. சுவரில் எந்த ஓவியமும் தீட்டப்படவில்லையே'' என்று கூறினார்கள்.

இந்துமுகன் எல்லோரையும் ஏமாற்றிவிட்டான் என்பது தெரிந்து போயிற்று. விஜயசிம்மன் கோபம் கொண்டு ''இவ்வளவு பேர்களையும் நீ முட்டாளாக்கவா பார்க்கிறாய்? உன்னைத் தூக்கிலிடுகிறேன் பார்'' என்று உறுமினான்.

இந்துமுகன் மன்னனை வணங்கி ''அரசே! என்னைத் தூக்கில் போடுங்கள். ஆனால் என்னைத் தங்கச் சங்கிலியில் மட்டும் தொங்கவிடாதீர்கள். ஏனெனில் இதுவரை எனக்கும் லட்சுமி தேவிக்கும் எவ்விதத் தொடர்பும் இருந்தது இல்லை. அது தொடர்ந்து இருக்கட்டும். திடீரென ஒரு மாற்றம் வேண்டாம்'' என்றான்.

இதைக் கேட்ட மன்னன் உட்பட யாவரும் சிரித்தார்கள். இனியும் இந்துமுகன் தன் தர்பாரில் இருப்பது சரியல்ல என்று விஜயசிம்மன் நினைத்து அவனுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து அனுப்பி விட்டான். அதன் பிறகு இந்துமுகன் அரசாங்க ஓவியனாகப் பணிபுரிய இயலவில்லை.



# அம்புலிமாமா செய்திகள்



## சுக்கிரனில் நீர்

அமெரிக்காவின் நாசா ஆராய்ச்சி நிலையம் பயோனீர்-12 என்ற உபகிரகத்தை அனுப்பியபோது அது சுக்கிரகிரகத்தைப் பற்றிய விவரங்களைச் சேகரித்துக் கொடுத்தது. அவற்றின்படி சுமார் மூன்று லட்சம் கோடி வருடங்களுக்கு முன் சமுத்திரங்கள் நிறைந்த நீர் இருந்தது என்றும் அதனால் அதில் பல நீர் வாழ் உயிரினங்கள் இருந்திருக்க வேண்டும் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

## மூக்குக் கண்ணாடித் தொலைக்காட்சி

வீடுகளில் உள்ள தொலைக்காட்சிப் பெட்டிகளோடு இப்போது நாம் செல்லும் இடங்களுக்கு எல்லாம் தொலைக்காட்சிப் பெட்டிகளை எடுத்துப் போகச் சிறிய அளவுப் பெட்டிகளும் வந்து விட்டன. இவை பாட்டரிகளால் இயங்குபவை. மோட்டார் கார்களில் சிறிய தொலைக்காட்சி பெட்டிகள் பொருத்தப் படுகின்றன. ஜப்பானில் கைக்கடியாரத்தில் தொலைக்காட்சியைக் காணும் விதத்திலும் செய்துள்ளார்கள். தற்போது ஹங்கேரியைச் சேர்ந்த பொறியாளர்கள் மூக்குக் கண்ணாடி பிரேமில் தொலைக்காட்சியைக் காணும் விதத்திலும் கண்டு பிடித்துள்ளார்களாம்.

## திடீர் புகைப்படம்

செய்தித்தாள்களுக்கு உடனுக்குடன் புகைப்படம் எடுத்து மறுநிமிடமே அனுப்ப புதிய எலெக்ட்ரானிக் சாதனங்கள் கிடைக்கின்றன. பிலிம் எடுத்துக் கழுவி பிரிண்ட் போடும் சிரமம் இல்லை. உபக்கிரகம் செய்தி அனுப்பு முறையில் கேமிராவிலிருந்து ரேடியோ டெலிபோன் வழியாக உப்க்கிரகத்திற்கு இணைக்கப்பட்டு மறுமுனையில் சென்ட்ரல் கம்ப்யூடருக்கு அனுப்ப, அது எங்கு அனுப்பப்பட வேண்டுமோ அங்கு அந்தப் படத்தை அனுப்பி விடுகிறது. இதெல்லாம் நவீன எலெக்ட்ரானிக் சாதனங்களால் ஒரு நொடியில் செய்து விடவும் முடிகிறது.



# சரியான தீர்ப்பு

வெகுகாலத்திற்கு முன் காஞ்சன புரத்தை கனகபாலன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் நீதிநெறி தவறாதவன். நியாயம் வழங்குவதில் பாரபட்சம் காட்டாதவன். அடிக்கு பதில் அடி, கொலைக்கு பதில் கொலை என்று தான் தீர்ப்பு. யார் எந்த நிலையில் குற்றம் புரிந்தானோ அவனுக்கு அதே நிலையை ஏற்படுத்தி தண்டனை வழங்கப்பட்டது.

ஒருநாள் மன்னன் மந்திரிகள், படைத் தலைவர்கள் பிரமுகர்கள் நிறைந்த தர்பாரில் வீற்றிருந்தான். அப்போது ஒரு முக்கியமான விஷயம் பற்றி அவர்கள் ஆலோசனை செய்து கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு நல்ல பாம்பு தர்பாருக்குள் நுழைந்து வந்துவிட்டது.

பாம்பைக் கண்டதும் தர்பாரில் இருந்தவர்கள் எல்லாம் பயந்து போனார்கள். எல்லோரும் என்ன செய்வது என எண்ணித் திகைத்து நடு நடுங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது இளவரசன் சட்டெனத் தன் வாளை உருவி அந்தப் பாம்பை இரு துண்டுகளாக வெட்டி விட்டான்.

வெட்டுண்ட பாம்பின் தலைப் பகுதி உருண்டு சுருண்டு புரண்டு எப்படியோ தான் வசிக்கும் புற்றை அடைந்தது. அதன் மனைவியான பெண் பாம்பு தன் கணவனுக்கு நேர்ந்த நிலை கண்டு கண்ணீர் வடித்தது. ஆண் பாம்பு தன்னை அரச சபையில் இளவரசன் இரு துண்டுகளாக ஆக்கியதைக் கூறி "இந்நாட்டு மன்னனின் சட்ட திட்டங்கள்தான் தெரியுமே. அதனால் நீ உன் வழக்கை மன்னனிடம் கூறினால் அவர் இளவரசனுக்குத் தக்க தண்டனையை அளிப்பார்.

—கிரு. அருணா—



எனவே நீ பழிக்குப் பழி வாங்க இள வரசனைத் தீண்டாதே. மன்னனி டம் நியாயம் கேள். இளவரசனுக்கு தண்டனை கிடைத்து விடும்" என்று கூறி இறந்து போயிற்று.

பெண் பாம்பு அன்றிரவே அரண்மனைக்குள் சென்று இளவர சனின் படுக்கை அறைக்குள் நுழைந் தது. மெய்மறந்து தூங்கிக் கொண் டிருக்கும் இளவரசனின் கழுத்தை அது சுற்றிக் கொண்டது. அதனால் இளவரசன் பயந்து நடுநடுங்கலா னான். "ஐயோ! பாம்பு!!" என்று அலறினான்.

அவன் கூவியதைக் கேட்டு எல் லோரும் ஓடி வந்தார்கள். இளவர சனின் கழுத்தில் சுற்றிக் கொண் டிருந்த பாம்பை எப்படி விலக்கு வது என்று எல்லோரும் யோசிக்க லானார்கள். அந்தப் பாம்பை அடித்தால் இளவரசனின் உயி ருக்கே ஆபத்து. பாம்பை அடித்து விரட்டா விட்டால் அது இளவர சனைக் கடித்து அவனைச் சாக டித்து விடும்.

என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கையில் அந்தப் பெண் பாம்பு மனிதக் குர லில் "முதலில் இங்கு மன்னரை அழைத்து வாருங்கள். அவரிடம் என் வழக்கைக் கூற வேண்டும். இதற்கு இடையில் என்னை யாரா வது கொல்ல நினைத்தால் நான் இளவரசனைக் கடித்து விடுவேன்" என்றது.

இதே சமயம் கனகபாலனும் அங்கு வந்து சேர்ந்தான். பெண் பாம்பு அவனிடம் தன் கணவன் இறந்தவிதத்தைக் கூறி "என் கண வர் யாருக்கும் எந்தக் கெடுதலை யும் செய்யவில்லை. அவர் தன் வழியே போய்க் கொண்டிருந்தார். அப்போது இளவரசன் அவரை வெட்டி அவரது உயிரைப் போக் கினான். என் கணவரை இழந்து நான் விதவையாகி விட்டேன். இந்நாட்டின் சட்டப்படி நான் இந்த இளவரசனைக் கொன்று இவன் மனைவியை விதவையாக்க வேண்டும்" என்றது.

அதைக்கேட்ட மன்னன் கவலை

கொண்டான். சட்டப்படி பெண் பாம்பு கூறுவது போலச் செய்தே ஆக வேண்டும். அப்படிச் செய்தால் தனக்குப் பிறந்த ஒரே ஒரு மகனை இழக்க வேண்டும். அதன் பின் அவனது வம்சமே அழிந்து விடுமே!

மன்னன் உடனே இரு நீதிபதிகளை அழைத்து வரச் சொன்னான். அவர்கள் இருவரும் பெண் பாம்பின் வழக்கை கவனமாகக் கேட்டார்கள். அப்போது ஒரு நீதிபதி "ஆம் இந்தப் பெண்பாம்பு கூறுவது சரியே. இளவரசன் இதன் கணவரைக் காரணமில்லாமல் கொன்று இதனை விதவையாக்கி விட்டான். அதுபோல இந்தப் பாம்பு இளவரசனைக் கடித்துக் கொன்று இளவரசனின் மனைவியை விதவையாக்குவதே சரி. அதுதான் நியாயம்" என்றார்.

அதைக்கேட்ட பெண் பாம்பு "இது சரியான தீர்ப்பல்ல" என்றது. அப்போது மற்றொரு நீதிபதி பெண் பாம்பைப் பார்த்து "நீ சொல்வது ஒரு வகையில் சரியே. நியாயம் சமநிலையில் வழங்கப்பட வேண்டும். உனக்குக் குழந்தை குட்டிகள் எவ்வளவு?" என்று கேட்டார். பெண் நாகமும் "எனக்கு ஐந்து மகன்கள்" என்றது.

நீதிபதியும் "ஐயோ பாவம்! இளவரசன் உன்னை ஐந்து புதல்வர்களோடு சேர்ந்து வாழும் விதவையாகவா ஆக்கிவிட்டார்? அதுபோல நீயும் இளவரசியை ஐந்து



புதல்வர்களோடு விதவையாக்க வேண்டும். அப்போதுதான் உன்னைப் போல அவளும் துடிதுடிப்பாள். என்ன, நான் சொல்வது சரிதானே?'' என்று கேட்டார்.

பெண் பாம்பும் ''ஆமாம். நீங்கள் சொல்வது முற்றிலும் சரியே'' என்றது. அப்போது அந்த நீதிபதி ''நீ அப்படிப்பட்ட தண்டனை வழங்க கொஞ்ச காலம் காத்திருக்க வேண்டும். இப்போதைக்கு இளவரசனின் மனைவி இரண்டு புதல்வர்களின் தாயே. அவள் ஐந்து புதல்வர்களின் தாயாகி உன் நிலைக்கு வந்ததும் இளவரசனை இரண்டு துண்டுகளாக வெட்டிப் போட்டு விடலாம்'' என்றார்.

மற்ற நீதிபதியும் ''இந்நாட்டின் சட்டதிட்டப்படி இவர் கூறிய தீர்ப்பே சரி. அதனால் இந்தத் தீர்ப்பின்படி நடக்க வேண்டியதே'' என்றார். பெண் பாம்பால் வேறு எதுவும் கூறமுடியவில்லை. அதனால் அது ''சரி. இந்தத் தீர்ப்பை ஏற்கிறேன். இந்த இளவரசனின் மனைவிக்கு ஐந்தாவது புதல்வன் பிறந்ததும் எனக்குச் சொல்லி அனுப்புங்கள்'' என்று சொல்லிவிட்டுச் சென்றது.

பெண் பாம்பு காத்துக் கொண்டேதான் இருக்க வேண்டியதாயிற்று. ஏனெனில் இளவரசனின் மனைவிக்கு இரண்டு குழந்தைகளுக்கு மேல் ஒன்று கூடப் பிறக்கவில்லை. பெண் பாம்பு மட்டும் அவ்வப்போது தன் புற்றிலிருந்து வெளிவந்து இளவரசனையும் அவனது மனைவியையும் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டே சென்றது.

எவ்வளவு ஆண்டுகளாயினும் அத்தம்பதிகளுக்கு மூன்றாவது குழந்தை பிறக்கவே இல்லை. பெண் பாம்பால் இளவரசனைப் பழி வாங்க முடியவில்லை. முடிவில் அதுவும் வயதாகிப் பழிவாங்க முடியாமல் இறந்தும் போயிற்று.



# இயற்கை விநோதங்கள்:



## இலைகளில் பச்சை நிறம்

புல், மரம், செடிகளில் இலைகள் பச்சை நிறத்தில் தென்பட அவற்றின் இலைகளிலுள்ள க்ளோரபான்களே காரணம். இந்த குளோரபானில் நீலப்பச்சையான குளோரபில், இலைப்பச்சை நிற குளோரபில்பி, மஞ்சள் நிற குவாண்டாபில், ரோஜா நிறக் கெரோடின் ஆகிய நான்கும் சேர்ந்துள்ளன. இலைகள் முதலில் இளம் பச்சை நிறத்திலிருந்து பிறகு அடர்பச்சை யாவதற்கு இவைதான் காரணம்.

## நிறம் மாறும் பச்சோந்தி



எதிரிகளிடமிருந்து தப்ப உயிரினங்களுக்கு இயற்கையே நல்ல விதத்தில் உதவுகிறது. சுற்றுபுறங்களுக்கு ஏற்ப தம் நிறத்தை மாற்றிக் கொள்வது இவற்றில் ஒன்றாகும். இப்படி மாறும் தன்மை கொண்டது பச்சோந்தி. இதன் தோலில் கிரமோடோபார்ஸ் என்ற நிறம்மாறும் சிறப்பு அணுக்கள் உள்ளன. சாதாரணமாக ஒரே நிறத்திலுள்ள இந்த அணு பச்சோந்தியின் தோலில் பல நிறங்களைக் கொண்டு உள்ளது. ஒரு நிறம் வேறொரு நிறத்தோடு சேரும்போது புதியதொரு நிறம் கிடைக்கிறது. நீலமும் மஞ்சளும் கலந்தால் இலைப்பச்சை நிறம், சிவப்பும் மஞ்சளும் சேர்ந்தால் ரோஜா நிறம். சிவப்பும் நீலமும் கலந்தால் ஊதா நிறம்.



## சிவப்பு நிறக் கொக்குகள்

காகம்போல முழுவதும் ஒரே நிறமாக உள்ள பறவைகள் மிகக் குறைவு. இவற்றில் டிரினிடாட் தீவில் தென்படும் சிவப்பு நிறக் கொக்குகளை முக்கியமாகக் குறிப்பிடலாம். இவை பார்க்க மிக அழகானவை. ஆறு கோடி ஆண்டுகளுக்கும் மேலாக வாழ்ந்த இவற்றின் உடல் பகுதிகள் கூட தற்போது கிடைத்துள்ளன. மனிதனின் வரலாற்றை எழுத கடவுள் இவற்றின் இறகுகளைப் பயன்படுத்தியதாக எகிப்தியர்கள் கருதினார்களாம். இவை பிறக்கும்போது ஊதா நிறத்திலும் பிறகு சாம்பல், வெள்ளை, ரோஜா நிறங்கள் பெற்று முடிவில் சிவப்பு நிறத்தை அடைகின்றன.

Vacation time is here again
Time to put text books away
So we've come together to say
Have fun and 'Happy Holidays'!



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 ஆகஸ்டு மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜுன் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **நினைவினில் இடம் பதித்தாய்!**

இரண்டாவது போட்டோ: **நெஞ்சினில் இடம் பிடித்தாய்!**

பரிசு பெற்றவர்: **அ. கமலம், கள்ளிக்கோட்டை - 2**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**


---

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்ருர், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா




**அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்**

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்